# கல்கி

KALKI 5.5.96 ரூ. 3.00

காரசாரமான விவாதம்!



மலிந்த விலையில் உயர்ந்த சரக்கு
மனசு குளுந்து போகும் பாரு!
தேடிவந்து வாங்கி பாருங்கள்



## ரேவதியுடன் மினி பேட்டி:

# தோல்வியும் ஓர் அனுபவமே?



● **தேர்தலில் ஜெயித்தால் முதலில் என்ன செய்வதாக இருக்கீங்க?**

முதலில் அனைவருக்கும் தரமான ஆரம்பக் கல்வி இலவசமாகக் கிடைக்க வழி செய்வேன். இப்போதெல்லாம் கல்வியே வியாபாரமாகிவிட்டது. பல ஏழைப் பெற்றோர்களால் தங்கள் குழந்தைகளைத் தரமான பள்ளிகளில் சேர்க்க முடியாத நிலை. இதை மாற்ற தீவிரமாக முயற்சி செய்வேன். அடுத்து என் தொகுதி முழுவதும் சுத்தமான சூழல் நிலவப் பாடுபடுவேன். போதுமான கழிவு மற்றும் குளியல் வசதிகளை ஏழைகள் குடியிருப்புகளில் அமைக்கச் செய்வேன்.

● **சட்டசபை உறுப்பினராக இருந்து இவற்றைச் செய்வது தானே ஏற்றது? பின் ஏன் எம்.பி. தேர்தலுக்குப் போட்டியிடுகிறீர்கள்?**

என் குறிக்கோள் ஆட்சியோ நிர்வாகமோ இல்லையே! மக்களுக்குச் சமூக சேவை செய்ய அரசியலை ஒரு நல்ல சாதனமாகப் பயன்படுத்திக்க விரும்பறேன், அவ்வளவுதான். மத்திய அரசுக்கு வெளிநாடுகளிலிருந்தெல்லாம் மனிதாபிமான அடிப்படையில் நன்கொடைகள் வருது. அதையெல்லாம் சரியான திசையில், தகுதியான சமூக நிறுவனங்கள் பயன்படுத்துமாறு அளிக்கப்பட நான் முயற்சி செய்வேன். மேலும், பாராளுமன்றத்துக்குப் போட்டியிடுவதால், நான் சேவை செய்ய எண்ணும் தொகுதியின் பரப்பும் அதிகமாகிறதே!

● **பாமரர்கள்தான் சினிமா கவர்ச்சியில் அதிகம் சிக்குவார்கள் என்றிருக்க, படித்தவர்கள் நிறைந்த தென்சென்னைத் தொகுதிக்குப் பதிலாக, கிராமங்கள் நிறைந்த ஒரு தொகுதியைத் தேர்ந்தெடுத்திருக்கலாமே?**

தேர்தலில் நிற்பதென்பது திடீரென்று எடுத்த முடிவு. திட்டமிட்டிருந்தால், நீங்கள் சொல்வது மாதிரியான பல விஷயங்களையும் யோசித்து முடிவெடுத்திருப்பேன். காந்தி நகரிலே எனக்காக ரோகிணி தேர்தல் பிரசாரத்துக்குப் போனபோது, ஒரு படித்த பெண்மணி 'என் வீட்டு வாசலில் வந்து நின்னு ரேவதியைக் கும்பிடு போடச் சொல்லு. அப்புறம் நான் அவளுக்கு வோட்டுப் போடறேன்' என்றாராம் கர்வத்துடன். பதினாறு லட்சம் வாக்காளர்களின் வீடுகளுக்குள் நான் நுழைந்து வோட்டுக் கேட்பது சாத்தியமா என்று அவர் யோசிக்க வேண்டாமா? தவிர, மக்களுக்கு நல்லது செய்ய எண்ணி நான் அரசியலில் இறங்கியிருக்க, ஏதோ எனக்கு வோட்டுப் போடுவதென்பது எனக்குப் பெரிய நன்மை செய்ய என்று எண்ணுவதும் கஷ்டமாயிருக்கிறது.

என் நல்ல நோக்கங்களை - எந்தவித குயுக்தி எண்ணமும் இல்லாமல் - படிச்சவங்களை விடப் படிக்காதவர்கள்தான் அதிகம் புரிஞ்சுக்கிறதாத் தோணுது.

● **நீங்கள் தோற்றுப் போகத்தான் வாய்ப்பிருக்கு....**

நிறைய்ய!

● **தோற்றுப் போனா என்ன செய்வதாக இருக்கீங்க?**

தோற்றுப் போனா என்ன செய்வேன் என்பது பற்றித் தீவிரமா யோசிக்கலே. அதையும் ஓர் அனுபவமா எடுத்துப்பேன். ஆனால் ஒன்று... பல சமூக சேவை நிறுவனங்களுக்குத் தொண்டு மனப்பான்மையோடும் நட்போடும் இதுவரை உதவியிருக்கேன். இனி நானே முக்கியப் பங்கு ஏற்கும் வகையில் சில சமூக சேவைப் பணிகளை மேற்கொள்வேன். மற்றபடி தவறான அரசியல் சக்திகளுக்கெதிராகப் போராடுவதில் சில நடைமுறைச் சிக்கல்கள் உண்டு. யோசித்து முடிவெடுப்பேன்.

**— ஜி.எஸ்.எஸ்.**

## இளைஞர் பிரச்னை :

இன்றைய சூழ்நிலையில் ஆண்களும் பெண்களும் பெரும்பாலும் தம் டீன்-ஏஜ்களின் இறுதியிலேயே வேலைக்குப் போய்விடுவதால் இணைந்து பழக - பணியாற்ற வேண்டிய நிர்ப்பந்தம் உள்ளது. இந்நிலையில் ஆண்-பெண் நட்புக்கு சமூகம் ஆதரவளிக்க வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறதா? 'பாய் ஃபிரெண்ட்' என்பதற்கான அர்த்தம் திருத்தி அமைக்கப் பட வேண்டுமா? ஓய்வுபெற்ற தலைமை ஆசிரியர் (கண்ணையன்) ஒரு ஜோடி பெற்றோர் (லலிதா - சுப்ரமணியன்) கல்லூரி மாணவர்கள் (எஸ். முத்துக்குமார் (எம்.காம்), பி. ராஜேஷ் (பி.எஸ்ஸி - லயோலா), மாணவிகள் (ஜெயா - பி.எஸ்ஸி. - எத்திராஜ், கவிதா, தாரா (+2)), ஆகியோர் கலந்து உரையாடுகிறார்கள் :



# 'பாய் ஃபிரெண்ட் கெட்ட வா

## ஒரு காரசாரமான விவாதம்!


• ராஜேஷ்


• கண்ணையன் • சுப்ரமணியன்

**கண்ணையன்** : நம் சமூகம், என்னதான் முன்னேற்றம் கண்டிருந்தாலும் அடிப்படையில், பழமையில் பிடிப்பு உள்ள ஒன்று. நடைமுறையில் நிறைய மாற்றங்கள் வந்துட்டு இருக்கு. நம் பழக்க வழக்கங்கள், அணுகுமுறை, தீர்மானங்கள் எல்லாமே மாறிட்டு இருக்கு. இளைஞர்களைப் பொறுத்தவரை இந்த மாற்றம் கொஞ்சம் வேகமா இருக்கு. குறை சொல்ல முடியாதுதான். ஆனால் பெற்றோர்களுக்குத் தான் இதனால் பொறுப்பும் பயமும் அதிகமாயிடுது.


• ஜெயா

**கவிதா** : எதுக்காக பயப்படணும்? ஒரு பையனோட பெண் பேசினா, பழகினா அது எப்படி தப்பு ஆகும்? அது இயல்பான விஷயம் தானே? தவிர, இன்றைய காலகட்டத்துல இதெல்லாம் ஒரு பெரிய விஷயமே இல்லை.

**கண்ணையன்** : ஆண்களுக்குப் பெரிய விஷயமில்லைதான். ஆனால் வயசுப் பெண்களுக்கு பாதிப்பு இருக்கும். ஆரோக்கியமான பார்வை, மக்களுக்கு இன்னும் முழுமையா உருவாகலை.


• லலிதா

**ராஜேஷ்** : கரெக்ட். ஆணுக்கு ஆண், பெண்ணுக்குப் பெண் ஃப்ரெண்டாக இருப்பதில் துளி பிரச்னை இல்லை. ஆனால் ஆண்-பெண் நட்புன்னு ஆரம்பிச்சால், ஒரு கட்டத்தில் அது லவ்வுல போயித்தான் நிக்கும்.

**லலிதா** : அப்படி ஒண்ணும் அவசியம் இல்லை. கல்மிஷம் இல்லாமல் பழகினால் ஒண்ணும் ஆகாது.

**கண்ணையன்** : கல்மிஷம் வேணும்னு அவசியம் இல்லை. காதல், இயல்பான உணர்வு. சுலபத்துல வந்துடும். தவிர இளம் வயது என்பது நெருப்பான பருவம் இல்லையா? இரண்டு பேரில் யாராவது ஒருத்தருக்கு 'ஏன் காதலிக்கக் கூடாது?' என்ற உணர்வு வந்துட்டால் போதும். நட்பு செத்துப் போயிடும்.

**சுப்ரமணியம்** : இன்னொரு முக்கியமான விஷயம். நம் சமூகத்தில் பெண்களுக்குக் கல்யாணம் ஒரு திருப்புமுனை. ஆண் நட்பு இருந்தது என்பது பின்னால் அவங்க திருமணத்துக்கே தடை ஆகலாம் இல்லையா?

**தாரா** : தேர்ந்தெடுக்கிற நண்பர்கள் நல்லவர்களாக இருந்துட்டால் எந்தக் கட்டத்திலும் பிரச்னை

# ...என்பது ...ந்தையா!


• தாரா

வராது.

**ஜெயா** : நண்பர்கள் தேர்ந்தெடுக்கும் போதே நாம் ஜாக்கிரதையாகத்தானே இருப் போம்? பிடித்திருந்தால் தானே பேசவே செய் வோம்? அப்பவே பிரச்னைகள் தீர்ந்துடும் இல் லையா?

**கண்ணையன்** : நண்பர்களைத் தேர்ந் தெடுக்கறது இருக்கட்டும். பிரச்னை வருவது, அடுத்தவர்கள் அதை எப்படிப் பார்ப்பாங் கன்றதில் தானே இருக்கு?

**கவிதா** : அது சரிதான். பொதுவா நம்ம சொஸைட்டிக்கே ஆணும் பெண்ணும் சும்மா பேசினாலே தப்பாத்தான் படுது. 'பாய் ஃபிரெண்ட்'னு சொன்னாலே கெட்ட வார்த்தை மாதிரி நினைக்கறாங்க. நேற்று காலை கோவிலுக்குப் போயிருந்தப்ப, எனக்குத் தெரிஞ்ச ஒரு பையன் அங்க வந்திருந்தான். பேசிட்டு இருந்தோம். தற்செயலா இதைப் பார்த்துட்ட எங்க பக்கத்து வீட்டு மாமி, ஒரு மாதிரி திருட்டு முழி முழிச்சி, நின்னு எங்களை கவனிக்க ஆரம்பிச்சாங்க. நான் பார்த்தேன். நேரா அவங்ககிட்டப் போயி, 'இவன் பத்தாங் கிளாஸ் படிக்கறான். என்னை விட ரெண்டு வயசு சின்னவன்; போதுமா?' அப்படீன்னுட் டேன். அவ்வளவுதான். அப்புறம் ஏன் அங்க நிக்கறாங்க? இதுல சோகமான விஷயம் என் னன்னா, எங்க அப்பா, அம்மா கூட இப்படி யெல்லாம் என்னைக் கேக்க மாட்டாங்க. அடிப்படையில் நம்பிக்கை முக்கியம்.

**சுப்ரமணியன்** : பெற்றோருக்குத் தம் பிள்ளைகள் மேல் நம்பிக்கை இருக்கும்தான். ஆனால் மூணாவது மனிதர் யாராவது 'உன் பெண்ணை ஒரு பையனோட பார்த்தேன்'னு வந்து சொல்லும் போது அதற்கான காரண காரியங்கள் ரெண்டாம் பட்சமாகி 'பெண்-பையன்-தனியா' அப்படீங்கறதுதான் மெயினா நிக்கும். பொறுப்பு இருக்கறவங்களுக்குத் தானே பயமும் இருக்கும்?

**கவிதா** : எதுக்கு பயப்படணுங்கறேன்? அவங்க அவங்களுக்குத் தம் எல்லைகள் தெரி யாதா? கண்டிச்சோ, திட்டியோவா பொறுப்பு வரவழைக்க முடியும்?

**ஜெயா** : இதுக்குத்தான் நான் என்ன பண்ணுவேன்னா, என் ஃபிரெண்ட்ஸ் எல்லா ரையும் வீட்டுக்குக் கூட்டிப் போய் அறிமுகப் படுத்திடுவேன்.

**முத்துக்குமார்** : பிரச்னைகளை எதிர் பார்த்து நண்பர்களை வீட்டுக்குக் கூட்டிப் போய் அறிமுகப்படுத்தணும்னா, அங்க உண் மையான நட்பு அடிவாங்குது. சொஸைட்டிக்கு பயப்படறவங்களுக்கு ஆண்-பெண் நட்பு எதுக்கு?

**தாரா** : அறிமுகப்படுத்தறது, பிரச்னையை எதிர்பார்த்து இல்லை. வீட்டுல நாம எதையும்



மறைக்க வேண்டிய சூழ்நிலை இல்லாம இருக் கத்தான்.

**ஜெயா** : என் நண்பர்களிடமெல்லாம் சொல்லி வெச்சிருக்கேன். எனக்கு நடுரோடுல நின்னு பேசினா பிடிக்காது. அநாவசியமா போன் பண்ணினா பிடிக்காது. எதும் பேச ணும்னா நேரா வீட்டுக்கு வா அப்படின்னு.

**கண்ணையன்** : பேச நல்லா இருக்கு. ஆனால் நடுத்தர வர்க்க மக்கள்ல, எத்தனை பேர் வீடுகள்ல இதை அனுமதிப்பாங்க? ஏதா வது ஒரு கட்டத்துல இந்த நட்பு அதிர்ச்சி யையோ, ஏமாற்றத்தையோ தரலாம். ஒரு ஆண், பெண்ணிடம் நட்பை விட, காதலைத்தான் பெரிதும் எதிர்பார்ப்பான். என் முப்பது வருஷ ஆசிரிய வாழ்க்கையில் பெரும்பாலும் பையன் கள் இப்படியாக இருப்பதைத்தான் பார்த்திருக் கிறேன்.

**சுப்ரமணியன்** : அது நிஜம்தான். காதல், நட்பு இரண்டுக்கும் வித்தியாசம் தேடி, கண்டு பிடிச்சி நடந்துக்க, பழகவெல்லாம் யாருக்கும் பொறுமை கிடையாது. ஏமாற்றம் வந்தால் அதுவே மிச்ச வாழ்க்கையை பாதிக்கிறது. சில பேர் தற் கொலையெல்லாம் பண்ணிக்கிறாங்க!

**லலிதா** : கோ-எஜுகேஷன் பள்ளிகளில் படிக்கிறவங்களுக்கு இந்தப் பிரச்னையெல்லாம் இல்லையென்று நினைக்கிறேன். ஆண்-பெண் வித்தியாசமெல்லாம் அங்கே அடிபட்டுடுது.

**கவிதா** : ஆமாம். என் கிளாஸ்ல எந்தப் பையனும் தப்பாவே பழகமாட்டான். அஞ்சாறு வருஷமா பழகறோம் இல்லையா? 'வாடா, போடா'ன்னுதான் பேசிப்போம். தனித்தனி ஸ்கூல்ல படிக்கற பசங்கதான் நட்பு பற்றித் தெரியாமல் இருக்கிறார்கள். கிண்டல் பண்ணு வது, லெட்டர் கொடுப்பதெல்லாம் அவங்க

தான். எல்லா ஸ்கூலுமே கோ-எஜுகேஷன் ஆயிட்டா பிரச்னை இல்லை.

**கண்ணையன்** : நான் கிராமத்துப் பள்ளிகளிலெல்லாம் ஹெட்-மாஸ்டரா இருந்து இருக்கேன். அங்கே ஆண்-பெண் பேசிக்கறது, பழகறது எல்லாம் சகஜம். நட்பு, காதல் அப் படீங்கற பெயர்களெல்லாம் அவங்களுக்குத் தெரியாது. கபடமில்லாமல் பழகுவாங்க. சீரழி வுகளெல்லாம் நகரங்களில்தான். இங்கே யாருக்கும் 'லிமிட்' தெரியறதில்லை.

**கவிதா** : எதை 'லிமிட்' என்கிறீர்கள்? நண்பர்களை எடை போட்டுக் கொண்டேவா இருக்க முடியும்?

**கண்ணையன்** : அப்படி அல்ல. குழந்தை களுக்கு, பெற்றோர்களே நண்பர்களைத் தேர்ந் தெடுத்து அடையாளம் காட்டலாம்.

**சுப்ரமணியன்** : அது, குழந்தைகளை ரொம் பவும் ரெஸ்ட்ரிக்ட் பண்ணுவது போல் ஆகி விடும். நடைமுறை சாத்தியமும் இல்லை.

**கவிதா** : குறைந்த பட்சம் 'பர்பஸ்' இருந் தால் மட்டும் பேசுவது என்று வெச்சுக்கலாமே?

**தாரா** : அது ரொம்ப மோசம். அது எப்படி ஃப்ரெண்ட்ஷிப் ஆகும்? இதெல்லாம் பெண் கள் மேல் நம்பிக்கை இல்லாமையையே காட்டு கிறது.

**கவிதா** : நம்பிக்கை இல்லைன்னு இல்லை. நம்ம சொஸைட்டி அப்படி இருக்கு.

**தாரா** : சொஸைட்டிக்கு எதுக்கு பயப்பட ணும்? நாலு பேருக்காகத்தானா நாம் வாழ றோம்? அப்ப நம்ம சந்தோஷம் அடிபட்டுப் போயிடும்.

**கவிதா** : சமூகம் என்பதும் நாம் தானே? பழைய நம்பிக்கைகள், பழக்க வழக்கங்களை உடனடியா உடைச்சுட முடியாது. அதே சமயம் தவிர்க்க முடியாமல் ஆயிட்ட ஆண்-பெண் நட்பையும் குறை சொல்ல முடியாது. இந்த ரெண்டு டிராக்கும் இணையணும். அப்பத்தான் . இது சமூகம் அங்கீகரிக்கிற விஷயமா ஆகும். ஏன்னா, பெண்களுக்குக் கல் யாணம் ஆச்சுன்னா, நாளை கணவனும் இதை ஏற்கணுமில்லையா?

**கண்ணையன்** : வரப் போகிற கணவனுக்கு உங்க பாய்-ஃப்ரெண்ட்ஷிப் பிடிக்கலைன்னா என்ன செய்வீங்க?

**தாரா** : முடிஞ்ச வரைக்கும் கன்வின்ஸ் பண்ணலாம். கைமீறிப் போச்சுன்னா ஃப்ரெண்ட் கிட்டப் பேசி, புரியவெச்சி, விலக வேண்டியதுதான்.

**முத்துக்குமார்** : ரொம்ப மோசமான நிலைமை.

**சுப்ரமணியன்** : மோசம்தான். சமூக அமைப்பு மாறினால் ஒழிய இதெல்லாம் சகஜ மாக வழியில்லை.

**கண்ணையன்** : சமூகம் மாறணும்னா என்ன? நம்ம மனோபாவம் மாறணும். ஆரோக் கியமான சிந்தனை, எல்லா தளங்களிலும் வளர ணும். அதுக்கு எல்லாருக்கும் முழுமையான கல்வி கிடைக்கணும். கையெழுத்து போடக் கத்துக்கிட்டா, கல்வி கிடைச்சுட்டதா அர்த்தம் இல்லை. வாழ்க்கையை கோணல் புத்தி இல் லாமல் பார்க்கிற மனநிலையைத் தரக்கூடிய முழுமையான கல்வி கிடைத்தாலொழிய இதெல்லாம் நம் சமூகத்துக்கு அந்நியமான விஷயம்தான்!

தொகுப்பு : **துளசி**

அட்டை வண்ணப்படம், படங்கள் : **கிருஷ்ணமூர்த்தி.**

# வாழ்வில் முடிவெடுத்த அந்தத் தருணம் என்றும் பசுமையானது...



## அதற்கு ஈடான மற்றொரு தருணம் நீங்கள் யெஸ்டி அஸோஸியேடட் பில்டர்ஸிடம் இல்லம் வாங்கும் இனிய தருணம்தான்!

அண்ணா நகர், தி. நகர், நங்கநல்லூர், வேளச்சேரி
மற்றும் பிற இடங்களில் அழகிய தரமான
டீலக்ஸ் ஃபிளாட்டுகள் மற்றும்
தனி வீடுகள் வாங்க

அணுகுங்கள்




**YESDE ASSOCIATED BUILDERS LTD.**

**FLAT PROMOTERS & PROPERTY DEVELOPERS**

26, Ranganathan Street, IInd Floor, T. Nagar, Madras - 600 017.
Phone : 4340224/4340210/4342667. Fax : 044-2344333

HITECH 9604

# சுஜாதா பக்கம்



நாஸ்ட்ரடாமஸ் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே உலகில் நிகழப் போகும் யுத்தங்கள், பூகம்பங்கள் அனைத்தையும் எழுதியிருக்கிறாரே உங்களுக்குத் தெரியுமா என்று பலர் என்னைக் கேட்டிருக்கிறார்கள். என் நெருங்கிய உறவினரான டி.வி.கேசரி, அவருடைய தந்தையார் பாகவதத்திலிருந்து தொகுத்திருந்த சில சுலோகங்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து எனக்கு அனுப்பியிருந்தார். நாஸ்ட்ரடாமஸ் போல கலியுகத்தைப் பற்றி சில ஆச்சரியமான ஹேஷ்யங்கள் உள்ளன. இன்றைய ஹவாலா தினங்களுக்கு பொருத்தமாக உள்ளன.

ஸ்கந்தம் 12ல் இரண்டாவது, மூன்றாவது அத்தியாயங்களில் இந்த சுலோகங்கள் வருகின்றனவாம். அவைகளில் சில:

"இந்தக் கலியுகத்தில் பணமும் சொத்தும் மட்டுமே பிறப்பு, பழக்க வழக்கங்கள், மரபுகள் அனைத்தையும் தீர்மானிக்கும். நியாய தர்மங்களில் கூட பணமும் செல்வச் சிறப்பும்தான் முக்கியமாக இருக்கும்.

"கணவர் மனைவியரிடையே பரஸ்பர விருப்பம் மட்டுமே முக்கியமாக இருக்கும். குடும்ப கௌரவமோ பெருமையோ சாதியோ மற்ற குடும்ப சமாசாரங்களோ அல்ல. காதல் மட்டுமே தீர்மானிக்கும். பிராமணர்கள் தம் பூணூலை மட்டும் காட்டி தாம் பிராமணர்கள் என்று சொல்லிக் கொள்வார்கள். வேத அறிவோ, வேறு தகுதிகளை வைத்தோ அல்ல (சுலோகம் 3). ஒரு மனிதனிடம் பணம் இல்லையென்றால் அவனைக் கெட்டவன் என்பார்கள். ஒருவன் சாது என்று அழைக்கப்பட பாசாங்கு தேவைப்படும். நீதி பெறுவதற்கு ஒருவன் லஞ்சம் கொடுக்கத் தயாராக இருக்க வேண்டும். அதிகம் பேசுபவனை பண்டிதன் என்று சொல்வார்கள். சாத்திரங்களின்படி நடக்காத கல்யாணமே கல்யாணம் என்பார்கள். தலை முடியை இஷ்டப்படி வைத்துக் கொள்வார்கள். வயிற்றை நிரப்புவதே அனைவரின் குறிக்கோளாக இருக்கும். அதட்டி சத்தமாகப் பேசும் பேச்சே உண்மை என்று கருதப்படும். (சுலோகங் கள் 4,5,6) ஆண்கள் மந்த புத்தியுடன் செல்வச் சிறப்பின்றி இருப்பார்கள். எப்போதும் உண்டு கொண்டு காலம், இடம் அறியாமல் காம வசப்படுவார்கள். பெண்களும் மோசமாவார்கள்.

"திருடர்கள் நிறைந்திருப்பார்கள். வேதங்கள் நாஸ்திகர்களால் பழிக்கப்படும். ஆட்சியில் இருப்பவர்கள் அதிகம் வரிபோட்டு நிறைய கேட்பார்கள். பிரம்மச்சாரிகள் சாஸ்திர அனுஷ்டானங்களை மறப்பார்கள். கிரகஸ்தர்கள் பிச்சை எடுப்பார்கள். சன்யாசிகள் பணத்தைத் தேடிச் செல்வார்கள்.

"பெண்கள் குள்ளமாக இருப்பார்கள். நிறைய சாப்பிடுவார்கள். நிறைய பிள்ளை பெறுவார்கள். மானம் வெட்கம் இன்றி இருப்பார்கள். கடுமையாகப் பேசுவார்கள். வியாபாரிகள் கோணல் புத்தியுள்ளவர்களாக இருப்பார்கள். பொய்யை மெய்யாக்குவார்கள். வேலைக்காரர்கள், எசமானர்கள் நல்லவர்களாக இருந்தாலும் பணம் இல்லையென்றால் விட்டு விடுவார்கள். எசமானர்களும் குடும்ப வேலைக்காரர்களை வயசாகி, பயனற்ற மாத்திரத்தில் புறக்கணிப்பார்கள். பசுக்களை வற்றின உடன் துறப்பார்கள். தந்தை, தாய், சகோதரர்களை, நல்ல உறவினர்களை விட்டு விட்டு மச்சினர் மச்சினிகளை மட்டும் மக்கள் கலந்தாலோசிப்பார்கள்.

"கலியுக மனங்களில் பயம் நிரம்பியிருக்கும். மழை இல்லாமல் உணவும் குடி நீரும், நல்ல படுக்கை, நல்ல சம்போகம், நல்ல நகைகள் இவை ஏதும் இன்றி பிசாசு போல வாழ்வார்கள். மோசமான பழக்கங்களுடன் வயிற்றை மட்டும் நிரப்பிக் கொண்டு பெற்றோரையும் பிள்ளைகளையும் புறக்கணிப்பார்கள்."

மூன்றாம் அத்தியாயம் பன்னிரண்டாம் ஸ்கந்தம் கடைசியில் உள்ள ஆறு ஸ்லோகங்கள் இந்த தோஷமெல்லாம் வராமல் காக்க புருஷோத்தமனான கோபாலனை- கிருஷ்ணனை மனமுவந்து வணங்கி வாழ்த்திப் பாட வேண்டும் என்று பரிகாரமும் சொல்கிறது. அதை நாம் செய்யத் தவறி விட்டோம் என்றே தோன்றுகிறது.

நாஸ்ட்ரடாமஸ் முதல் இன்றைய சைன்ஸ் பிக்ஷன் எழுத்தாளர்கள் வரை அனைவருமே எதிர்காலம் மோசமாக இருக்கப் போகிறது என்கிற அடிப்படையில்தான் எழுதியுள்ளார்கள். இதற்கு மனோதத்துவ காரணம் 'நான் போனபின் இந்த உலகம் இன்ப மயமாக இருப்பது எனக்குப் பிடிக்காதது'தான். வயசானவர்கள் பிரிட்டிஷ் காலத்தில் எப்படி சீரும் சிறப்புமாக இருந்தோம்; காலணாவுக்கு அரிசி, நாலணாவுக்குத் தங்கம் என்று சொல்லிக் கொள்வதின் அடிப்படைக்காரணமும் இதுதான். அந்த வகையில்தான் இந்த ஸ்ரீமத் பாகவத சுலோகங்களும் சாரும். எதிர்காலம் பற்றி சிந்திப்பதில் அதிகம் சிரமமில்லை. இக்காலத்தில் நடப்பதை நுட்பமாக அறிந்து அதிலிருந்து இன்னும் மோசமாகும் என்று சொன்னால் பலிக்கும். 'என்ட்ரப்பி' பிரபஞ்சத்தில் அதிகமாகிக் கொண்டே போகிறது என்பது இயற்பியல் விஞ்ஞானப்படி, சரியான சித்தாந்தம். அதாவது, உலகின் மொத்தமான குழப்பம் அதிகரித்து ஒழுங்கிலிருந்து ஒழுங்கீனத்துக்கு செல்வதுதான் இயற்கையின் பாதை என்கிறது இயற்பியல் விஞ்ஞானம். இதனால்தான் பாகவதத்தில் எழுதினதும் நாஸ்ட்ரடாமஸ் சொன்னதும் நிஜமாகிறது. நல்லது நடக்கும் என்று எழுதினால் பலிக்காது.

இவனைப் பிடிக்கவே முடியவில்லை. தரையில் கால் பாவாமல் மிதந்தான். பெரும் பட்டதாரியும், வெளிநாடு சுற்றுப்பயணம் செய்தவருமான தலைவரை நேரில் சந்தித்துப் பேசப் போகிறோம் என்ற நினைப்பே அவனுக்கு இறக்கை முளைத்த மாதிரியிருந்தது.

கனவுகளில் இறக்கையடித்துப் பறந்தான். ஒரு தேவதூதனைத் தொட்டுணரப்போகிற பரபரப்பு.

பால்ச்சாமி ததும்பித் தத்தளித்த அந்த நாளும் வந்தது. ஒரு கல்யாண மண்டபத்தில் ஏற்பாடு. குழுக்குழுவாக இளந்தோழர்கள் வந்து குவிந்தனர். உற்சாகமான குசல விசாரிப்புகள். உரத்த சத்தங்கள்.

"தோழரே... என்ன கிளைப் பதிவு முடிஞ்சதா?"

"புக் கொடுத்துருக்கு. இன்னும் வரலை..."

"பேரவைக்கு வசூல் பண்ணுனீகளா?"

"ஆமா..."

"உங்களுக்கு எவ்வளவு கோட்டா?"

"கோட்டா ரொம்பப் பெரிசு. முடியாது. ஓயாம 'வசூல், வசூல்'னு போய் நின்னு, எங்க வருது?"

"முயற்சி பண்ணுனா முடியும்!"

"அதுக்கும் ஒரு அளவில்லே? வெதைச்சா... ஒருதடவை அறுவடை பண்ணலாம். வருசம் பூராவும் ஓயாம அறுவடை பண்ண முடியுமா?"

"காம்ரேடுகள் நல்லா பேசப் படிச்சுக்கிட்டீக?"

நட்பும் தோழமையுமான புன்னகைகள். கல்மிஷமில்லாத வெள்ளை மனங்களின் வெடிச்சிரிப்புகளாக, முகங்களில் இயல்பான மலர்ச்சி. கேலி, கிண்டல்கள்... மனசை காயப்படுத்தாத கிண்டல்கள், உள்நோக்கமற்று மகிழ்ச்சியோடு வெளிப்பட்டு, மகிழ்ச்சிப் படுத்துகிற கேலிகள்....

கல்யாண மண்டபமே ஒரு கல்யாண வீட்டை விடவும் கலகலப்பாக இருந்தது. மனவெளிச்சமாகப் பிரகாசித்தது.

பால்ச்சாமிக்குப் புதிய அனுபவம். ரத்த தான நிகழ்வில் சந்தித்துப் பரிச்சயமான தோழர்கள், பால்ச்சாமியைப் பார்த்து புன்னகைத்தனர்.

"வாங்க... வாங்க" என்று உபசரித்தனர். சிநேகித பாவத்துடன் கூடிய அந்த உபசரிப்பும் குசல விசாரிப்பும் இவனுள் உறுத்திய அந்நிய உணர்வைத் துடைத்து, ஒரு தோழமையான மனோபாவத்தை ஏற்படுத்தியது.

பேரவைக் கூட்டம் துவங்கியது. பால்ச்சாமி மனசு பூராவும் தலைவரையே





நினைத்து ஏங்கியது. 'எப்படியிருப்பார், எப்படி யிருப்பார்' என்று ஒவ்வொரு அணுவும் எண்ணித் துடித்தது.

பளபளப்பான பூட்ஸ்... பளிச்சென்ற ஷபாரி சூட்... கோட்... டை...பின்... சுற்றிலும் நறுமணத்தைச் சிந்துகிற வாசனைத் திரவியம்... ஓங்குதாங்கான தோற்றம்... ஏஸியிலும் க்ரீம் பூச்சிலுமே கனிந்து பளபளப்பான முகம்.

இப்படியான ஒரு இமேஜ் உள்ளுக்குள் இருந் தது. சட்டென்று ஒரு குட்டிப் பரபரப்பு. தலைவர் வந்து விட்டார் என்ற அடக்கமான சத்தக் கிசு கிசுப்பு.

பால்ச்சாமியின் கவனமும் முழுப் பார்வையும் வாசலில் நிலைத்தது. முதலில் ராஜேந்திரன் ஒரு சூட்கேஸுடன் வந்தான். பின்னால் அந்தத் தலைவர்.

எல்லோரும் அவருக்கு 'விஷ்' பண்ணுகின்றனர்.

இவனது இமேஜ், இடிந்து நொறுங்கி, 'பொல பொல'வென்று உதிர்ந்தது.

சாதாரணமான பேண்ட்... ஒரு சிமிண்ட் கலர் சட்டை... பயணக் களைப்பில் கலைந்த தலைமுடி.. கறுத்த முகம். குழிகுழியாக விழுந்திருந்த எண்ணற்ற அம்மைத் தழும்புகள். எப்போதாவது போடு கிற வெற்றிலைக்குச் சிவந்த கீழுதடு...

ரொம்பச் சரா

மேலாண்மை பொன்னுச்சாமி

# ஆகாயச் சிறகுகள்

4

சரியான தோற்றம். ஆனால், முகத்தில் மட்டும் கபடமற்ற புன்னகை. சராசரியற்ற தேஜஸ். மனசுக்கும் முகத்துக்கும் இடையில் எந்தத் திரைகளுமில்லாமல்... மனசே முகத்தில் பூவாய் பூத்து ஒளிர்வதைப் போல ஒரு தேஜஸ்.

"தோழர்... இந்த ஃபிரண்டை நீங்க பாக்கணும்" என்றார், ராஜேந்திரன். கை, பக்கத்தில் தன் வசமிழந்து பரவச வடிவமாய் நின்ற பால்ச்சாமி யைக் காட்டியது.

தலைவரின் பார்வை, பால்ச்சாமியின் மீது விசேஷ கவனத்துடன் நின்று நிலைத்தது. அன்பும் புன்னகையுமாக ஆத்மாவைத் தழுவியது.

"பிரதர்... யாரு?"

"கமல் நற்பணி மன்றத் தலைவர். பால்ச்சாமி. ரத்ததான கேம்பெயின்லே ரொம்ப ஒத்துழைப்பா நின்னவர்..."

"அப்படியா...? சபாஷ். தோரணம் கட்டி பூஜை வைக்குறது மட்டும்தான் ரசிகர் மன்றத்தோட வேலை என்கிற இமேஜை உடைக்கிறதும், இளைஞர்களோட ரத்தமும் வீர்யமும் சமுதாய மேம்பாட்டுக்குப் பயன்படுறதும் ரொம்ப ரொம்ப ஆரோக்கியமான விஷயம். பால்ச்சாமி, ஒங்களுக்கு என்னோட வாழ்த்துக்கள்..." என்று தலைவர் மனசின் அசல் வெளிப்பாடாகப் பேசினார். 'என்ன பேசுவது.. எப்படி தேங்க்ஸ் சொல்வது' என்று கூட தோன்றாமல், பரவசக் குழப்பத்தில் தத்தளித்தான் பால்ச்சாமி.

அவனது கையைப் பற்றிக் குலுக்கி, இடது கையால் இவனது தோளில் வாஞ்சையோடு தட்டிக் கொடுத்தார்.

பால்ச்சாமி கனவுலகில் தூக்கியெறியப் பட்டவனாக அந்தரத்தில் உழன்றான். கையைப் பற்றியிருந்த அவர் கையில் குளிர்ச்சி. படாடோபமற்ற இயல்புத்தன்மை. அசலான அன்புணர்ச்சி.

"பால்ச்சாமி... நல்ல சினிமா, நல்ல நடிப்பு பற்றியெல்லாம் யோசிக்கிற நீங்க, நல்ல வாழ்க்கை, நல்ல சமுதாய அமைப்பு, மனுசங்க மனுசத் தன்மையோட வாழ முடியுற சமூகச் சூழல் இதைப் பற்றியும் கனவு காணணும். யோசிக்கணும். லட்சியம் கொள்ளணும். அதுக்காக நம்ம வேர்வையும் ஆயுசையும் அர்ப்பணிக்கணும். ஸோ... இன்னிக்கு உங்களைச் சந்திச்சதுலே சந்தோஷம். ராஜேந்திரன், பேரவைக்குப் போவமா?"

"சரிங்க, தோழர்!" என்று ராஜேந்திரன் முன் நடக்க, தலைவர் மறுபடியும் இவனது கைகுலுக்கி விட்டுப் போனார்.

கியூபா போன்ற வெளிநாடுகளெல்லாம் சுற்றியவர், சர்வதேச வாலிபர் மாநாடுகளுக்கெல்லாம் இந்தியப் பிரதிநிதியாகச் சென்றவர்.. லட்சக்கணக்கான இளைஞர்களைக் கொண்ட அமைப்பின் மாநிலத் தலைவர்...

அடே... அப்பா! எத்தனை பெரிய மனிதர். இந்தச் சாதாரண பால்ச்சாமியைக்கூட தொட்டு-கைகுலுக்கி- 'ப்ரதர், ப்ரதர்' என்று சகோதர வாஞ்சையோடு பேசி.. அடடா...! எத்தனை பெரிய விஷயம். அம்மை வடுக்கள் நிறைந்த அந்தக் கறுத்த- இனிய- முகம், நெஞ்சில் கல்வெட்டாகப் பதிந்து விட்டது.

பால்ச்சாமி வாலிபர் சங்கத்தில் சேர்ந்து விட்டான். எதிலும் தீவிரமானவன் ஆயிற்றே! வாலிபர் சங்கத்திலும் புயலாகச் செயல்பட்டான்.

வாலிபர் சங்கத்தில் செயல்படுகிறபோது, பால்ச்சாமியின் உலகமே விரிவடைந்தது. மொத்த உலகத்தின் இயக்க சூட்சமம் புரிந்தது.

அடிக்கடி நடக்கிற பேரவைகள். அதில் தலைவர்கள் செய்கிற ரிப்போர்ட்கள். அமெரிக்க ஏகாதிபத்தியம், உலக வங்கி, பன்னாட்டு ஏகபோகங்கள்... ராணுவ அரசுகள்... அதன் அத்து மீறலான அக்ரமங்கள்.. நமீபியா, தென் ஆப்ரிக்கா, நெல்சன் மண்டேலா... க்யூபா.. ருஷ்யா... என்று ஏகப்பட்ட தகவல்கள். ஏகப்பட்ட படிப்பினைகள். மொத்த உலகத்தின் சகல அரசியல் நடவடிக்கைகள் பற்றிய விபரங்கள்.

இவன் ரெண்டு தடவை சென்னை போயிருக்கிறான், திருவள்ளுவர் பஸ்ஸில். ஏதோ வெளிநாடு போகிற குதூகல வியப்பில் தத்தளித்தான். உற்சாகப் பெருக்கு.

இப்போது இவனுள் அறிமுகமாகி விஸ்தரிக்கிற உலகப் பரப்பில்... சென்னை, உள்ளூர் போலத் தோன்றுகிறது.

சென்னை செல்கிறபோது, ஒரு விஷயம் இவனை ரொம்ப உறுத்தியது. சிவகாசியிலிருந்து சென்னை போவதற்குள் அந்தப் பகல்



# பார்க் டவுன்
## பெனிபிட் பண்ட் லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம். துவக்கம் 1985 Post Box No: 2806

★ 223, தங்க சாலை, (கந்த கோட்டம் அருகில்) பார்க் டவுன்,
சென்னை-3 போன்: 5352676, 5354354

**கிளை அலுவலகங்கள்:**

★ திருவான்மியூர், 2, கிழக்கு மாடவீதி, சென்னை-41 போன் 413582, 416417
★ அண்ணாநகர், P-995, இரண்டாவது அவென்யு, 12-வது மெயின்ரோடு ஜங்ஷன், சென்னை-40 போன் 6262656, 6280750
★ தி.நகர், 3, ரங்கநாதன் தெரு, சென்னை-600 017. போன் : 4344319
★ அம்பத்தூர், 215 ,M.T.H. Road, பஸ் நிலையம்,சென்னை-53. போன்:6357725
★ கோடம்பாக்கம், 73 & 74, ஆற்காடு ரோடு,சென்னை-600 024. போன்:4846528
**திருச்சி:** CRYSTL PLAZA 22, நந்தி கோவில் தெரு, தெப்பக்குளம், திருச்சி-620 010



### கனகதாரா டிபாசிட்

ரூ.50,000/- முதலீடு செய்வீர்
10ஆம் ஆண்டு முடிவில்
ரூ.50,000/- பெறுவீர்
அடுத்த 20ஆம் ஆண்டு முடிவில்
ரூ.1 கோடி பெறுவீர்

### வெகுமதி முதலீட்டுத் திட்டம் - II

ரூ.3450/- செலுத்துவீர்.
252 மாதங்கள் நிறைவில்
ரூ.2 லட்சம் பெறுவீர்.

**சேமிப்பு திட்டம் 10% P.a.**

### பிக்சட் டிபாசிட்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு ★ |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

**21%** 5 வருடங்கள் ரூ.50,000/- அதற்கு மேலும்

### PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும்தொகை |
|---|---|---|
| ரூ.25,000 | 60 மாதம் | ரூ.70,000 |

### காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம்

| டிபாசிட் திட்டம் 15 ஆண்டுகள் | 5-ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 10ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 15ம் ஆண்டு பெறும் தொகை |
|---|---|---|---|
| Rs.6,320 | Rs.6,000 | Rs.6,000 | Rs.56,320 |

### செல்வக்களஞ்சியம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| Rs.7,500 | 15 Yrs | Rs.1,25,000 |
| Rs.9,000 | | Rs.1,50,000 |

### பொற்குவியல் திட்டம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| மாதா மாதம் ரூ.100/- | 25 Yrs | Rs.3,00,000 |

### மறு முதலீட்டுத் திட்டம் !

உங்கள் தொகை 45 மாதங்களில் இரட்டிப்பு ஆகும்

| டிபாசிட் | 12 மாதம் | 24 மாதம் | 45 மாதம் | 60 மாதம் |
|---|---|---|---|---|
| Rs.1,000 | Rs.1,184 | Rs.1,430 | Rs.2,000 | Rs.2,535 |



**பென்ஷனர் நலத்திட்டம் 20% P.a.**
குறைந்தபட்சம் 10 ஆயிரம் அதற்கு மேலும்: காலம் 1 ஆண்டு
ஓய்வூதியர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

**தங்க நகை கடன்**
Rs. 3,000 PER 10 GRAM
விதிகளின் பேரில் கடன் வழங்கப்படும்.
(உச்ச வரம்பில்லை)

நிர்வாக இயக்குனர்:
**Dr.P.பாலசுப்ரமணியம், B.Sc.**
முதன்மை அறங்காவலர்
கந்தகோட்டம், சென்னை - 3.

இயக்குனர் குழுத் தலைவர்:
**Dr.R. விவேகானந்தன், B.Com., M.B.A.**

❐ ரூ.5/- செலுத்தி பங்குதாரர் ஆவீர். ❐ சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டும் ❐ வெள்ளி விடுமுறை



**நடைபாதைக் கோயில்கள் நாளும் பொழுதும் பெருகுவதைத் தடுக்க பீஹார் அரசு மிகவும் புத்தி சாலித்தனமாக ஒரு காரியத்தைச் செய்துள்ளது. நடைபாதைக் கோயில்கள் அனைத்தையும் அரசே தன் உரிமையாக எடுத்துக் கொள்ளும் என பொதுப் பணித்துறை அறிவித்து விட்டது. சாலைகள் எல் லாம் அரசுக்குச் சொந்தமாகிவிடும் என்பது அரசின் வாதம். பொதுப்பணித்துறை அமைச்சரான இலியாஸ் ஹுசேன் இதோடு நிற்கவில்லை. இனி மேல் இந்த நடைபாதைக் கோயில்களில் வசூலாகும் தொகை, சாலைகளைச் செப்பனிடப் பயன்படுத்தப் படும் எனக்கூறியுள்ளார். இந்த ஏற்பாட்டினால் போக்குவரத்திற்கு இடைஞ்சலாக நடைபாதைக் கோயில்கள் கட்டுவது நிற்கும் என அரசு எதிர் பார்க்கிறது.**

**—எஸ். ஆலன்**

**(ஆதாரம் : சண்டே)**

---

நேரப்பயணத்தில் மட்டும்– 'ஒன்னுக்கிருக்க' ஆறு ரூபாய் செலவாயிற்று.

விழுப்புரத்தில் பஸ் நிற்கும். கண்டக்டரிடம் சொல்லி விட்டு கழிப்பிடம் தேடி ஓடுவான். உபத்திரவப் படபடப்பு. ஒருவர் வழிமறித்துக் கேட்பார்...

"துட்டு...துட்டு..."

"எம்புட்டு?"

"அம்பது பைசா..."

"அடப்பாவிகளா" என்று உள்ளுக்குள் கூவுவான். இப்படியே ஆறுரூபாய் செலவு.

மனசு கிடந்து எரிந்தது. "என்னடா இது, அநியாயமாயிருக்கு. ஒன்னுக்கிருக்கக் கூட கட்டணமா? ச்சேய்! இவங்களையெல்லாம் நடுத் தெருவுலே நிப்பாட்டிச் சுடுற மாதிரி ராணுவ ஆட்சி வரணும். அப்பத்தான் நெலைமை சரிப்படும்" என்று எரிச்சலில் யோசித்தான். இதெல்லாம்... முன்பு.

'ஒன்னுக்கு இருக்க சிவகாசி பஸ் நிலையத் தில் காசு கேட்பதே.. உலக வங்கியின் உத் தரவுப்படிதான்' என்று இப்போது புரிகிற போது... வியப்பாக இருந்தது.

உலக வங்கியிடம் தமிழக அரசு சுகாதாரச் சேவைக்காகக் கடன் கோருகிறது. "சுகாதார வியாபாரத்தில் எவ்வளவு லாபம் ஈட்டுவீர்கள்" எனக் கேட்கிறது உலக வங்கி.

"இல்லை. கக்கூஸ் கட்டுவது கவர்மெண்ட் பொறுப்பு. இது சேவை. லாபம் வராது."

"லாபம் வராத துறைக்கு நாங்கள் கடன் தர இயலாது."

"ஐயய்யோ... கடன் இல்லாமல் எங்களால் இயங்க முடியாது."

"அப்படியானால் நாங்கள் லாபம் ஈட்டுகிற துறையாக சுகாதாரத்துறையை மாற்ற திட்டம் தருகிறோம். அமுல் படுத்துவீர்களா?"

"என்ன திட்டம்?"

"கட்டணக் கழிப்பிடம்."

இப்படித்தான் இந்த வினோதக் கட்டடங் கள், தமிழகத்தில் 1980ல் வருகின்றன. பஸ் கட்டண உயர்வுகளும் கூட இப்படித்தான் நடக்கிறது.

இந்தியன் சிறுநீர் கழிக்க இந்திய அரசு காசு வாங்குகிறது. அதுவும் உலக வங்கி உத் தரவுக்குக் கட்டுப்பட்டு.

அப்படியானால் இந்திய அரசின் சுயேட் சைத் தன்மை எங்கே? திட்டமிடும் சுதந்தரம் என்னாயிற்று? பொருளாதார சுதந்தரம் என்னா யிற்று? உலக வங்கியே இந்திய பட்ஜெட்டின் மூளை என்றால்... இந்திய மூளை என்னா யிற்று?

இப்படி எண்ணற்ற கேள்விகள். வியப் பலைகள். அதற்கான விடைகள்.... விபரம் தெரியத் தெரிய... இந்தியாவின் இரண்டாவது சுதந்தரப் போராட்டம் இளைஞர்களின் கடமையாகக் காத்திருப்பதை உணர்ந்தான், பால்ச்சாமி.

இப்படித்தான் பால்ச்சாமி கம்யூனிஸ்டாக மாறினான். கட்சியில் சேர்ந்து பணியாற்றத் துவங்க, நிறைய நிறைய நூல்கள் படிக்க... சொந்த அனுபவங்கள் அரசியல் வெளிச்சத்தில் ஞானமாகத் திரள...

அவன், அவனானான். பால்ச்சாமி, உள்ளும் புறமுமாய் மாறினான். சகல விஷயங்கள் குறித் தும் புதிய புதிய பார்வைகள். புதியநோக்கு. புதிய அணுகுமுறை. புதிய குறியீடுகள். புதிய துணிச்சல்கள்.

கல்யாணத்தைக் கூட, அப்படித்தான் முடித்தான்.

**அ**ப்போது...

அவன் இருந்த குடும்ப நிலைமைக்கு வசதியான இடத்தில் பெண் எடுக்க முடியும். அழகான பெண், அதிக வரதட்சணை என்று வாங்க இயலும்.

அந்த வாய்ப்புகளையெல்லாம் அலட்சிய மாக ஒதுக்கித் தள்ளினான். 'ஏழ்மையான குடும்பத்தில்– வரதட்சணை தர வழியில்லாமல் தத்தளிக்கிற ஒரு பெண்ணைத்தான் கல்யாணம் செய்ய வேண்டும்' என்று லட்சியமானான்.

அப்படியே கல்யாணமும் நடந்தது. பிரேமா மனைவியாக வந்தாள். நகை நட்டு கிடையாது. வரதட்சணை கிடையாது. கம்மல், மூக்குத்தி யோடு எளிய கல்யாணம்.

ஆனால்,

பிரேமாதான் பால்ச்சாமிக்கு பெரும் பிரச்னையாகிப் போனாள். பிரேமாவால் வந்த பிரச்னையில்தான் அவன், பின்னமாகிப் போனான்.

(தொடரும்)

## மெய்சிலிர்த்த அனுபவங்கள்



# எப்ப வருவாரோ?

**1976**-ம் வருடம். அலுவலகப் பணியாக, நாங்கள் ஒரு குழுவாகக் காஞ்சிபுரம் சென்றிருந்தோம். எனக்கு, பரமாச்சார்யார் மீது மிகுந்த ஈடுபாடு உண்டு. 'இவ்வளவு தூரம் வந்து விட்டு, அவரை தரிசிக்காமல் செல்வதா' என்று தோன்றவே, உடனிருந்த நண்பர் பாலனிடம், "வருகிறீர்களா? பெரியவரை தரிசித்து விட்டு வரலாம்!" என்று கேட்டேன்.

பாலன், இந்துதான். ஆனால் கிறிஸ்துவ மதப் பிடிப்பாளர். இயேசுநாதரை வணங்குபவர். இருப்பினும் என் வேண்டுகோளைத் தட்டாமல், என்னுடன் வரச் சம்மதித்தார்.

**அ**ன்று மாலை ஆறு மணிக்கு நாங்கள் மடத்துக்குச் சென்றோம். கிணற்றுக்கு முன்புறம் சிறிய நடைபாதையைத் தாண்டி உள்ள அறையில் பெரியவர் வீற்றிருந்தார். வரிசையில் நகர்ந்து, அவரை நெருங்கி வணங்கினேன்.

பெயரைக் கேட்டார். ஊரைக் கேட்டார். நான் மதுரைக்காரன் என்று தெரிந்ததும், "ஓ, மதுரையா? அங்கே சித்திரைத் திருவிழா ரொம்ப விசேஷம் இல்லையா? எத்தனை பேர் கூடுவா?" என்று கேட்டார்.

"இரண்டு லட்சத்துக்குக் குறையாது" என்று பதில் சொன்னேன்.

உடனே அவர் உதவியாளர் பக்கம் திரும்பி, "இரண்டு லட்சம் பேர்! என்ன கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும்!" என்று குழந்தை போல் குதூகலமுடன் கூறியபடி, என்னுடன் வந்திருந்த பாலனைக் கவனித்து, பெயரைக் கேட்டார். சொன்னதும் சுவாமிகள் என்ன நினைத்தாரோ.

"நம்பிக்கை உள்ளவாளும் நம்பிக்கை இல்லாதவாளும் வந்திருப்பா. நம்பிக்கைன்னா என்ன? ஒரு பொருள் மேல் நாம் வைக்கிற ஆசைதான். ஆத்மார்த்த, அளவற்ற பற்றுதான் நம்பிக்கை!" என்றதும் பாலன் திணறி விட்டார்!

அப்படியே முழங்காலிட்டு சுவாமியை வணங்கியவர், வெளியே வந்ததும், "என் வாழ்க்கையில் நான் வணங்கும் இயேசு பெருமானையே நேரில் பார்த்தது போல் இருக்கிறது!" என்றதும், எனக்கு சிலிர்த்து விட்டது.

– கே. சுப்பராஜன், மதுரை – 2.

● சென்ற வருடம் அடையாறு ஹம்ஸத்வனி சபாவில் டி.வி. சங்கரநாராயணன் கச்சேரிக்குப் போயிருந்தேன். கீர்த்தனைகள் முடிந்து, துக்கடாக்கள் ஆரம்பித்தவர். சட்டென்று காஞ்சிப் பெரியவர் பற்றிய ஒரு ராகமாலிகை விருத்தத்தை எடுத்தார். உருக்கம் என்றால் அப்படி ஒரு உருக்கம்!

அன்று கடம் வாசித்த விநாயகராமுக்கு, பெரியவர் மேல் அபார ஈடுபாடு. டி.வி.எஸ். பாடிய அந்த விருத்தத்தைக் கேட்டவர், கண்ணீர் வழிய அப்படியே கடத்தின் மேல் சாய்ந்து விட்டார்! ஒருசில நிமிடங்கள் தலையை நிமிர்த்தவே இல்லை!

அந்தப் பாடலுக்கு எத்தனை அர்த்தமும் சக்தியும் இருந்தால் அப்படி அவரை நெகிழ்த்தியிருக்க வேண்டும்!

அந்தப் பாடல் முடிந்ததும் இடைவெளி இன்றி, டி.வி.எஸ்., 'எப்ப வருவாரோ?' என்று ஜோன்புரியில் ஆரம்பித்ததுதான் தாமதம் – புல்லரித்து விட்டது எனக்கு!

– வி. மகாலிங்கம், சென்னை – 11.

**மே 5 –**
**காஞ்சி முனிவர் ஜெயந்தி.**



1996 மே 5
தாது சித்திரை 23
மலர் : 54
இதழ் : 40

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# வேண்டாம், குதிரை வியாபாரம்!

'கற்றோருக்கு சென்ற இடமெல்லாம் சிறப்பு; ஊழல் புரிந்தோருக்கு ஊர்தோறும் எதிர்ப்பு!' அபிப்பிராய வாக்கெடுப்புக்கே அவசியமின்றி, ஆளும்கட்சிக்கு எதிர்ப்பு அலை வீசுகிறது தமிழகத்தில். தி.மு.க. - தமிழ் மாநில காங்கிரஸ் கூட்டணி என்னும் புதிய சக்திக்கு ஒரு வாய்ப்புக் கொடுத்துப் பார்க்க மக்கள் தயாராகி விட்டார்கள்.

'தோழமை கட்சியேயானாலும் தவறுகள் செய்தால் தட்டிக் கேட்போம்' என்று மூப்பனார் பேசியிருப்பது மேலும் நம்பிக்கை தருகிறது. இந்த விஷயத்தில் தமிழ் மாநில காங்கிரஸ் உறுப்பினர்கள் அச்சமின்றி செயல்படுவார்கள் என்பதைக் கடந்த ஆட்சியின் போது நடந்த சம்பவங்கள் உணர்த்துகின்றன.

தமிழகத்தின் அரசியல் எதிர்காலம் குறித்து நம்பிக்கையுடன் இருப்பது போல் மத்தியில் அமையக்கூடிய ஆட்சி குறித்து மகிழ்ச்சியுடன் பேச இயலவில்லை. நடக்கவிருக்கும் தேர்தலில் எந்த ஒரு கட்சிக்கும் அறுதிப் பெரும்பான்மை கிடைக்கும் என்று உறுதியாகக் கூற இயலாத நிலை.

அதிக இடங்களைப் பெறும் கட்சி, பிற கட்சி எம்.பி.க்களை விலை பேசி ஆதரவு




திரட்டும் அச்சுறுத்தல் நிலவுகிறது. களத்தில் இருக்கும் அனைத்துக் கட்சிகளுமே அவ்வாறு விலை பேசவும் போகவும் கூடியவைதான் என்பது கவலைக்கும் வருத்தத்துக்குமுரிய உண்மை.

தார்மிக நெறிகளின் அடிப்படையில் மட்டுமின்றி, கடந்த கால அனுபவங்களின் அடிப்படையில் பார்க்கும்போதும் 'குதிரை வர்த்தகம்' (எம்.பிக்களை விலைக்கு வாங்குதல்) என்பது தவிர்க்கப்பட வேண்டிய நடைமுறை.

பணத்துக்காக விலைபோகக்கூடிய ஒருவருடைய விசுவாசத்தைத் தொடர்ந்து தக்கவைத்துக் கொள்ள முடியும் என்பது அடிப்படையிலேயே தவறான நம்பிக்கை.

கடந்த ஐந்து ஆண்டுகளாகப் பதவியில் நீடிப்பதற்காக காங்கிரஸ் தலைவர் நரசிம்மராவ் நடத்திய 'குதிரை வர்த்தகம்' பற்றிய குற்றச்சாட்டுகள், புற்றீசல் போல் இப்போது வெளிவந்து கொண்டிருக்கின்றன. காங்கிரஸின் வெற்றி வாய்ப்புகளையே பாதித்துள்ளன.

நடக்கவிருக்கும் தேர்தலில் அறுதிப் பெரும்பான்மை கிடைக்காத நிலையில், 'ஆட்சி அமைக்கப் போவதில்லை' என்று கூறியிருக்கிறது பி.ஜே.பி. ஆனால் காங்கிரஸ் தலைவர் நரசிம்மராவோ, தமது கட்சிக்கு அறுதிப் பெரும்பான்மை கிடைக்கும் என்பதில் கண்மூடித் தனமான உறுதியுடன் இருக்கிறார்!

இந்த இரு கட்சிகளுமே ஏற்க மறுக்கும் ஆரோக்கியமான ஏற்பாடு, கூட்டாட்சி முறை. அதிக இடங்களைப் பெறும் கட்சி, ஒத்த கருத்துடைய இதர கட்சிகளின் ஆதரவு கோரி, அக்கட்சித் தரப்பினருக்கு ஆட்சியில் பங்குகொடுக்க முன்வர வேண்டும்.




காங்கிரஸுக்கு அதிக இடங்கள் கிடைக்கும் பட்சத்தில் ஜனதா தளத்தின் ஆதரவைக் கோரலாம். கொள்கை அளவில் மிகப் பெரிய வேறுபாடுகள் அற்ற இரு கட்சிகள் இணைந்து செயல்படுவதில் சிக்கல்கள் எழ வாய்ப்புக் குறைவு. இன்று காங்கிரஸின் பெருமைக்குரிய சாதனையாகப் பேசப்படும் பொருளாதார சீர்திருத்தங்களுக்கு வித்திட்டவர், ராஜீவ் காந்தியின் நிதி அமைச்சராக இருந்த இன்றைய ஜனதா தள மூத்த தலைவர் வி.பி. சிங்தான்.

தனித்தன்மையை விட்டுக் கொடுக்காமல் இவ்வாறு ஒன்றுக்கு மேற்பட்ட கட்சிகள் இணைந்து ஆட்சி அமைக்கும்போது ஆரோக்கியமானதொரு கண்காணிப்பு முறை இயல்பிலேயே உருவாகிறது. லஞ்ச லாவண்யங்களுக்கான வாய்ப்பு குறைவதுடன் பல்முனை கருத்துப் பரிமாற்றத்துக்கும் வழி பிறக்கிறது. எந்தவொரு முடிவையும் தனியொரு தலைவர் எடுக்காமல், பெரும்பான்மை ஆதரவின் அடிப்படையில் எடுக்க வேண்டிய மெய்யான ஜனநாயக சூழல் மலர்கிறது.

இந்தத் தடவையாவது பணபலத்தை நம்பாமல் ஆரோக்கியமான ஜனநாயக மரபுகள் நிலைத்திடச் செய்ய வேண்டும். கூட்டாட்சியை ஏற்கும் சந்தர்ப்பத்தில், காங்கிரஸின் தலைமை மாற்றப்பட வேண்டும் என்று பலமான வற்புறுத்தல் எழ வாய்ப்பு இருக்கிறது. நாட்டு நலன் கருதி, அந்த வற்புறுத்தலுக்கு காங்கிரஸ் இணங்கத்தான் வேண்டும். நரசிம்மராவும் அவர் ஆதரவாளர்களும் தேவைப்படுமானால் அந்த இறுதித் தியாகத் துக்கும் தங்களைத் தயார்ப்படுத்திக் கொள்வது நல்லது.

—ரஷரியிலிருந்து வந்த லிஸ்டை விரித்தான் அகோரம். லிஸ்டா அது. ஜமக்காளம். கூட்டுப் புள்ளிக்காகப் பென்சிலை எடுத்தான்.

"போவமா அகோரம்" மார்ஷல் ப்ரிட்டோ இவனுடைய முதுகிற்கு நேரே மறைப்பது போல் நின்றபடி கேட்டான்.

அட, நீ வேறா... இன்றோடு நான்கு நாட்களாகிவிட்டது, உனக்குச் சொல்லி... நுணல் கெடுவது வாயால். வழியோடு போன ப்ரிட்டோவை அழைப்பானேன். க்ஷேமலாபம் விசாரிப்பானேன். அவனுடைய பையனின் அட்மிஷனுக்காக அலைவதைச் சொல்வானேன். ப்ரின்சிபாலைத் தெரியும் என்பானேன்...

"வண்டியை ரெடியா வை ப்ரிட்டோ... இதையெல்லாம் வச்சுட்டு வந்துடறேன்..." சொல்லிக் கொண்டே பேப்பர்களை ட்ராயரில் திணித்தான்.

"வண்டிய ப்ரதர்-இன்லா வாங்கிட்டுப் போயிருக்கான். இங்க இருக்கற நண்பர்கள் நகர்தான். டவுன் பஸ்ஸைப் புடிச்சா மூணு நிமிஷம்..." பிரிட்டோ விரலைச் சொடுக்கினான்.

டிராயரைப் பூட்டிவிட்டு வெளியே வந்து பஸ் பிடித்து பிரின்சிபால் வீட்டுக்குச் சென்றார்கள். மார்ஷல் பிரிட்டோவின் மகனுடைய ஜாதகத்தைத் துண்டுச் சீட்டில் எழுதிக் கொடுத்தார்கள்.

"ஆல்ரைட்... எதுக்கும் என்ட்ரன்ஸ் எக்ஸாம் அன்னிக்கு ஞாபகப்படுத்துங்க. ஐ'ல் டூ த நீட் ஃபுல்."

வெளியே வந்தபோது பஸ்களில் விளக்கு ஏற்றியிருந்தார்கள்.

"அகோரம்... ஒண்ணும் பிரச்னை இருக்காதே..." பிரிட்டோ ஐயத்துடன் கேட்டான்.

"நோ... நோ... முடியாதுன்னா சொல்லியிருப்பாரே...!"

"என்னவோ போ... நம்ம காலத்துல அழகா கவர்ன்மெண்ட் ஸ்கூலுக்குப் போனோம்; படிச்சோம்; உத்தியோகத்துக்கும் வந்துட்டோம். என் பையனோட ஸ்கூல் யூனிஃபார்ம், தூள் துப்பட்டைன்னு செலவை நினைச்சா மூர்ச்சை போட்டுருவேன் போல இருக்கு. ஸ்கூல் ஃபைனல் வரைக்கும் நான் செஞ்ச செலவை இந்த கிண்டர் கார்டன் அடிச்சுட்டுப் போயிடுச்சு..." பிரிட்டோ குரலில் சோகம் ததும்பியது... விடைபெற்றான்.

அவரவருக்கு அவரவர் பிரச்னை. நானூற்றுச் சொச்ச பென்ஷனர்களில் முக்கால்வாசிக்கும் மேல் நாளை என்னை முற்றுகையிடப் போகிறார்கள். கூட்டுப் புள்ளியில் ஒரு ஸ்தானத்தைத் தாண்டவில்லை இன்னும். எந்தவிதக் குறுக்கீடும் இல்லாமல் இனிமேல் நான் ஆரம்பித்தால் கூட நான்கு மணி நேரம் ஆகும். சிந்தனையோடு அகோரம் ஆபீஸ் திரும்பினான்.

**அ**க்கவுண்ட்ஸ் ஆபீசர் மேலே இரு கரத்தையும் காட்டினார். இலக்கங்களை முணுமுணுத்தபடி... முணுமுணுப்பை நிறுத்திவிட்டுத் தத்துவஞானி போலப் பேசினார்.

"இன்றிருப்பார் நாளை இல்லை... யாக்கை நிலையாமை... இருக்கிற மட்டும் இருக்க வேண்டியதுதான்..." சீரியஸாகப் பதில் சொன்னார்.

"தெரியாமக் கேட்டுட்டேன். சொற்குற்றம், பொருட்குற்றம் இருப்பின், மன்னிக்க வேண்டுகிறேன்..." அகோரம் பணிந்தான்.

"கோவிச்சுக்காதேப்பா... சும்மா சொன்னேன். எல்லாரும் வீட்டுல கதாகாலட்சேபத்துக்குப் போயிருக்காங்க. ஒம்பது மணி வரைக்கும் டெட்லைன்... அப்புறம் தேகா ஜாயேகா."

அகோரத்தின் வீட்டில் யாரும் காலட்சேபத்திற்குப் போகவில்லை. அகோரத்தின்



மனைவியான ருக்மிணியாகப்பட்டவள் இன்னும் அரைமணி நேரம் பார்ப்பாள். அதற்குப் பிறகு அவள் வீட்டு வாசலில் வந்து நின்றால் கணவன் வந்த பிறகு அவனுடனே உள்ளே திரும்புவாள்.

தான் என்ன சின்னக் குழந்தையா காணாமல் போவதற்கு...? சொல்லிப் பார்த்தாயிற்று. கேட்கமாட்டாள். அவ்வாறு அவனுக்காக அவள் காத்திருக்கும் போதுதான் குழந்தைகள் இசகு பிசகாய் ஏதாவது கேட்டு மாட்டிக் கொள்ளும்... முதுகில் இரண்டு வாங்கி,

## சிறுகதை

சுப்ரமண்யன் ரவிச்சந்திரன்

கன்னத்தில் நீர்க்கோடு உண்டாக்கி, கோடு காயும் முன் அப்படியே உறங்கிப் போகும். அகோரம் வந்ததும் எழுப்பப்படும். தூக்கக் கலக்கம் போகாமல் சாமியாடிய படியே உணவு... குழந்தைகளுக்காகக் கவலைப்பட்டான்.

ஓர் எட்டு போய் வந்துவிடலாம்...

"சார்... வீடு வரைக்கும் போயிட்டு வந்துடறேன். பென்ஷன் போடணும். நீங்க இருப்...'' நிறுத்திக்கொண்டான். ஆபீசர் மீண்டும் யாக்கை நிலையாமை குறித்து விரிவுரையாற்றி விடுவாரோ என்னும் அச்சம் எழுந்தது... அவருக்கும் வடிகால் வேண்டுமே...

''நான் போனாலும் அச்சுதன்கிட்ட ஆபீஸ் சாவி இருக்கும். யூ கேரி ஆன்."

"ஓங்களுக்கு எல்லாம் டேலி ஆயிடுச்சா சார்? ஒரு கம்பெனிக்கு நீங்களும் வாங்களேன் சார்!"

''அய்ய... இன்னிக்கு என் வைஃப் கம்பெனி குடுக்கச் சொல்லியிருக்காய்யா. நம்ம வீட்டண்ட தியேட்டர்ல உழைப்பாளி படம். பசங்க பிடுங்கறாங்க... ஆபீஸ் அலை ஒய்ஞ்சு குளிக்கறதாவது... கஷ்டம்..."

அடேய் அகோரம்... உலகில், அவரவர் மனைவி மக்களுடன் காலட்சேபம், ரஜினி படம் என்று நேரத்தைப் பகிர்ந்து கொள்கிறார்கள். உன் மனைவி ருக்மிணிக்கு சாஸ்வதமான இடம் உன் வீட்டு வாசல் படிதான்.

தன்னெஞ்சு சுட்டது...

இதையும் மீறி அகோரத்திற்கு நானூற்றுச் சொச்ச முகங்கள் தெரிந்தன... கதர்ச் சட்டை, சவரம் செய்யாத நான்கு நாள் வெள்ளை ரோம முகம், உயிரைத் தவிர எதையும் சுமக்க முடியாத பலமற்ற உடல், அலுப்பு, களைப்பு, பரிதாபம், பயம், கோபம்...

ருக்மிணி... என்னை மன்னிப்பாயாக... எப்படியும் உன்னையும் நான்கு இடங்களுக்கு அழைத்துப் போக ஆசையும் நம்பிக்கையும் இருக்கிறது...'

**"ஹை**... அப்பா..." முதல் பையன் கார்த்திக் முழங்காலில் மோதியபோது சந்தோஷமாக இருந்தது.



## சுருக் நறுக் - 26 - முடிவுகள்

கீழ்க்கண்ட சொல்லோவியங்கள் தலா ரூ. 50/- பரிசு பெறுகின்றன.

### வாழ்க்கை என்பது...

● விடுமுறையே இல்லாத பாடத் திட்டம்.

- அ. மு. நிவேதிதா, சென்னை - 88.

● இன்பம், துன்பம் என்ற இரண்டு கரைகளைக் கொண்ட நதி!

- தென்கை பாபி, திருவாரூர்.

● வெங்காயம்; உரிக்கும் போது கண்ணீர்! வானவில்; உணரும்போது பன்னீர்!

- எல். சண்முகசுந்தரி, இராமநாதபுரம் -1.

● ஜனனம் போட்ட கடிதத்திற்கு, மரணம் பதில் போட எடுத்துக் கொள்ளும் காலம்.

- ஏ. ஜெகதா, கோயம்புத்தூர் - 25.

● இறக்கத்தில் அனாயாசமாகக் கிடைக்கும் இன்பத்தை நோக்கி மேடேறும்போது முட்டி முறிய வைக்கும் சைக்கிள்.

- ரமணி பார்த்தசாரதி, சென்னை - 59.

● குலுக்கல் தேதிவரை பரிசு விழும் என்று நம்பிக்கை தருகிற லாட்டரிச் சீட்டு!

- நா. சீனிவாசன், கும்பகோணம் - 1.

● ஒரு வீணை. வாசிக்கக் கற்றுக் கொண்டால் ஆயிரமாயிரம் அழகான பாடல்கள். இல்லையேல் அது வீணான ஒன்று.

- ப. மூர்த்தி, பெங்களூர் - 560 021.

*26 வார முடிவுகள் வெளியாகிவிட்டன. மின்னும் டைட்டன் கடிகாரங்கள் யாருடைய கரங்களை அலங்கரிக்கப் போகின்றன? அடுத்த வாரம் வரை காத்திருங்கள்!*

- ஆர்.

ருக்மிணி வானத்தைப் பார்த்தாள்... மழை, கிழை?

"அவன் எங்க, பிரதாத்?" இரண்டாம் பையன்... மழலை... 'ச' வரவில்லை...

"தோ இருக்கேன். அப்பா ரஜினி படம்" கெஞ்சினான்.

"நாளைக்குக் கட்டாயம் போறோம்... ஓ.கே?" வேதனையை உள்ளே அடக்கிப் பூரிப்பை வெளியே காட்டினான் போலியாய்...

குழந்தைகள் ஆமோதித்துத் தலையாட்டிய போது நெஞ்சு கசிந்து போனது... வரங்கள் என் பிள்ளைகள்...

ருக்மிணி மட்டும் கணங்கினாள், மீண்டும் அவன் ஆபீஸ் கிளம்பியபோது...

நல்லவேளை... அச்சுதனைத் தேடிக் கொண்டு போய் ஆபீஸ் சாவி வாங்கும் நிலை ஏற்படவில்லை... அக்கவுண்ட்ஸ் ஆபீசரின் மேஜை மீது இருந்த ஹெல்மெட், கொத்துச் சாவி, டிபன் டப்பாவை அடக்கிய ஒயர் பை, அவர் ஜனகனமண பாடப் போவதைச் சொல்லின.

"ஆல்ரைட் அகோரம்... கதவைச் சாத்திக் குங்க. நான் வரேன்..."

அகோரம் தனித்து விடப்பட்டான்.

தலைக்கு மேல் ஓடும் மின்விசிறியின் இரைச்சல் பூதாகாரமாக இருந்தது. பேரிங் போயிருக்க வேண்டும். தெருவில் வாகனங்கள் ஓடுவது மட்டுப்பட்டிருந்தது.

அகோரமும் ட்ரஷரி பேப்பரும். நெடிய தவத்தில் அரை மணி நேரம்... ஐந்து ரூபாய் உதைத்தது... மீண்டும் ஆதியிலிருந்து பார்க்க ஆரம்பித்தான்... மூன்றை எட்டு போலப் போட்டிருந்தார் ட்ரஷரி கிளார்க்.

எல்லாம் தயாரான திருப்தியில் நெட்டி முறித்தான்... கடிகாரம் ஒரு மணியைக் காண்பித்தபோதுதான் ருக்மிணி என்னும் இல்லாள் மற்றும் பையன்கள் நினைவுக்கு வந்தனர். எல்லா விளக்குகளையும் அணைத்து, பூட்டிய பூட்டைத் தொங்கிச் சரிபார்த்து சைக்கிளை எடுத்தான்.

சைக்கிளில் போகக் கூடப் பயமாயிருந்தது... அருகாமையில் ஒரு நாய் திடுமென ஒரே ஸ்தாயியில் சங்கு பிடிப்பது போல் ஊளையிட, தேன்கூடு கலைந்தது போல் வெவ்வேறு திசைகளிலிருந்தும் நாய்கள் கோஷ்டி கானம் பாடின. சப்தம் அடிக் குலையை அறுத்தது...

இரண்டு மூன்று முறை முயற்சி செய்து அழைத்த பின்பே ருக்மிணி கதவைத் திறந்தாள்... பாவம், பாதித் தூக்கத்தில் எழுந்து வந்திருக்கிறாள். மீண்டும் அவள் உறங்க வெகு நேரம் ஆகும்.

காலையில் விழிக்கையில் பொட்டு வலித்தது. கண், திறக்க முடியாமல் கூசியது...

எப்படியோ இந்த மாதம் பென்ஷன் போட்டாகிவிட்டது. வயதானவர்கள் குறித்த




# பெஸ்ட் பெனிபிட் பண்ட் லிமிடெட்

(மத்திய சர்க்காரால் இந்திய கம்பெனிகள் சட்டம் 1956-ன் கீழ் பதிவு செய்யப்பட்டது)

**தலைமை காரியாலயம்** : 3-வது மாடி, சாந்தி காம்ப்ளெக்ஸ், 26, ரங்கநாதன் தெரு,
*(விடுமுறை இல்லை)* தி.நகர், சென்னை - 17. Ph : 4348560/4347025

**நங்கநல்லூர் கிளை** : 13, கல்லூரி சாலை, சென்னை - 600 114.
*(வெள்ளி விடுமுறை)* BM : P. தியாகராஜன், மாஜி கிரைண்ட்லேஸ் பேங்க்.

**குரோம்பேட்டை கிளை** : 5, 2வது பிரதான சாலை, நியூ காலனி, சென்னை - 600 044.
*(வெள்ளி விடுமுறை)* BM : S. இராஜகோபால், M.Sc., CAIIB, மாஜி இந்தியன் பேங்க்.

**தாம்பரம் சானடோரியம் கிளை** : 7, ஸ்டேஷன் ரோடு, சென்னை - 600 047.
*(வெள்ளி விடுமுறை)* BM : R. V. இராமமூர்த்தி, மாஜி கிரைண்ட்லேஸ் பேங்க்.

**1. வாடிக்கையாளர் வசதி திட்டம் :** (TM)

*30 நாட்கள் - 18% 45 நாட்கள் - 19% 60 நாட்கள் 20% 90 நாட்கள் 21% வேண்டும்போது பணம் எடுத்துக் கொள்ளலாம். குறிப்பிட்ட காலம் முடிந்தவுடன் புதுப்பிக்க வரவேண்டிய அவசியமில்லை.*

**2. பென்ஷனர்/பொதுஜன பாதுகாப்புத் திட்டம் :** (TM)

*1 வருடம் - 22%; 2 வருடம் - 23%; 3 வருடம் - 24%*

**3. அதிகபட்ச வருவாய் திட்டம்/சுமங்கலி கல்யாணத் திட்டம் :** (TM)

| டெபாசிட் தொகை | முடிவில் கிடைக்கும் தொகை | | | | |
|---|---|---|---|---|---|
| | 12 மாதம் | 24 மாதம் | 36 மாதம் | 40 மாதம் | 60 மாதம் |
| ரூ. 1,000 | ரூ. 1,240 | ரூ. 1,533 | ரூ. 1,880 | ரூ. 2,000 | ரூ. 3,000 |
| ரூ. 5,000 | ரூ. 6,200 | ரூ. 7,665 | ரூ. 9,400 | ரூ. 10,000 | ரூ. 15,000 |

**4. குழந்தைகள் எதிர்கால பாதுகாப்பு திட்டம்/பெஸ்ட் பாண்ட் ஸ்கீம் :** (TM)

*ரூ. 1,000 பத்து வருடங்களில் ரூ. 10,740 ஆகும். 15 வருடங்களில் ரூ. 35,250 ஆகும்.*

**5. முன் கூட்டிய வருவாய் திட்டம் :** (TM)

*டெபாசிட் காலத்திற்கான முழு வட்டியும், டெபாசிட் செய்யும் தேதியன்றே தரப்படும். 1 வருடம் 18%.*

**6. தாத்தாவின் பரிசுத் திட்டம் :** (TM)

*ரூ. 1,000 15 வருடங்களில் ரூ. 35,250 ஆகும். 10 வருடங்களில் ரூ. 10,740 ஆகும்.*

**7. சேவிங்ஸ் பேங்க் : 14% ;** (TM) : டிரேட்மார்க்

**உங்கள் வீட்டிற்கும் வந்து சேவை செய்கிறோம்**

***BBF — THE CUSTOMER CONSCIOUS MAHASHAKTHI*** (TM)
***BBF — THE CUSTOMER FRIENDLY MAHABANK*** (TM)

**CHAIRMAN**
**Prof. V. VIVEKANAND B.Com (Distn), MBA (Distn), CAIIB (All India First), EKSAMD (Distn.) (GERMANY) IAS (Topper).**

**Dr. PARMESWARI, M.B.B.S.**
**VICE CHAIRMAN**

காலத்தில் பென்ஷன் கிடைத்த திருப்தியில் நோட்டுகளை எண்ணியபடி செல்வர். பிள்ளைகள் இன்று ஒரு நாளாவது அவர்கள் அப்பாக்களிடம் எரிச்சல்படாமல் இருப்பர். பேரன் பேத்திகளுக்கு ஏதாவது வாங்கிப் போவதன் மூலம் முதல் தலைமுறையும் மூன்றாவது தலைமுறையும் தோழமை கொள்ளலாம்.

முருகேசன், சேவிங்ஸ் பேங்க் செக்ஷன், சப்தம் போட்டுக் கொண்டிருந்தான்.

"ஏ.ஓ. சார்... சனிக்கிழமையும் அதுவுமா ஏன் சார் பென்ஷனை ரிலீஸ் பண்றீங்க. இருக்கிற ரெண்டு மணி நேரத்துல எதைப் பார்க்கிறது? கட் பண்ணிட்டு மண்டே ரிலீஸ் பண்ணுங்க..."

இன்று வேறு ஆளும் இல்லை. மீறி இன்று ரிலீஸ் செய்தால் முருகேசன் விடுப்பில் போய் விடுவான்...

அக்கவுண்ட்ஸ் ஆபீசருக்கு நைட்ஷோ பார்த்த களைப்பு வேறு... வாதாட முடியாது... முருகேசனுக்குப் பணிந்து தேதியை வெட்டினார்.

குனிந்து வேலை பார்த்துக் கொண்டிருந்த அகோரம் தன் முன் நிழலாட, நிமிர்ந்தான்... அந்த வயதானவர் நின்றிருந்தார்.

"ஏன்? என்ன வேணும்?"

"நீங்கதானே பென்ஷன் பார்க்கிறீளார்க?" அவர் குரலில் சன்னமாய் விறைப்பு இருந்தது. பார்வை எரித்தது.

"ஆமாம்... என்ன வேணும் அதுக்கு...?" அகோரம் வெகு சாதாரணமாய்க் கேட்டான்.

"நீங்கள்ளாம் நாலாயிரம், அஞ்சாயிரம்னு ஸாலரி வாங்கறீங்க. எங்களுக்குத் தர்ற நாநூறு, ஐந்நூறு, கொசுறா உங்களுக்குப் படலாம். நாங்க வயசானவங்க. கடன் கூட வாங்க முடியாத ரிடையர்ட் பர்சன்ஸ்... குடுக்கற பென்ஷனைக் காலாகாலத்துல குடுத்தா ஹெல்ப்ஃபுல்லா இருக்கும்... நான் ஒங்களுக்கு ஆர்டர் போடலே. ஒரு ரிக்வெஸ்ட்தான். கொஞ்சம் அண்டர்ஸ்டாண்ட் பண்ணினா தேவலை... மண்டேதான் பென்ஷன் போடுவீங்களாமே..." அவர் குரலில் எஞ்சியது கோபமா, இரைச்சலா?

"யார் சொன்னாங்க...?" அகோரத்திற்கு இன்னும் தலைவலி போகவில்லை.

"அதோ அந்த சார்தான்" பென்ஷனர் கையைக் காட்டினார்.

அங்கு முருகேசன் ஒப்பனை அதிகமாக உள்ள ஒரு சீமாட்டியுடன் பேசிக் கொண்டிருந்தான்.

அவனது சார்பில் அகோரம் 'ஸாரி' என்ற போது ஏதும் பேசாமல் நடந்து போனார் பென்ஷனர்.

# நாடக மேடையில் ரேவதி!



"ஒரு நேர்மையான குடிமகன் என்ற முறையில் வோட்டுப் போடுவதைத் தவிர, இந்தத் தேர்தலுக்கு வேறென்ன என்னால் செய்ய முடியும் என்று யோசித்தேன். என் நாடகக் காட்சிகளுக்கிடையே ஓரிரு நிமிடங்கள், வேட்பாளர்கள் பிரசாரத்துக்காக விட்டுக் கொடுக்கிறேன்!" என்றார் எஸ். வி. சேகர்.

தென் சென்னை பாராளுமன்றத் தொகுதிக்கு பி.ஜே.பி. சார்பில் நிற்கும் டாக்டர் மைத்ரேயன், நடிகை ரேவதி இப்படி நாடகம் பார்க்க வருகிற வேட்பாளர்கள் விரும்பிக் கேட்டதால் இடைவேளையில் சில நிமிடங்கள் பிரசாரம் செய்ய அனுமதித்திருக்கிறார் சேகர்.

"தற்சமயம் எனக்கு எந்தக் கட்சி சார்பும் இல்லை. எந்தக் கட்சியினரும் சுயேட்சை வேட்பாளரும் விரும்பினால் என் மேடையில் சில நிமிடங்கள் தரத் தயார்" என்னும் சேகர், நாடக முடிவில், "கட்சியைப் பார்க்காதீர்கள். வேட்பாளர் யோக்கியமானவரா என்பதைப் பார்த்து வோட்டுப் போடுங்கள்" என்று தாமே தினமும் பேசுகிறார்!

— கிச்சா



# சென்னையில் ஜெ!

**முதல் கட்டமாகத் தேர்தல் நடக்கும் மாவட்டங்களில் தேர்தல் பிரசாரப் பயணத்தை முடித்துக் கொண்ட ஜெ, கடந்த வாரம் சென்னை நகருக்குள் காரடி(!) எடுத்து வைத்தார். சென்னை நகருக்குள் அவர் செய்த மின்னல் வேகப் பிரசாரப் பயணம், மக்கள் மத்தியில் எந்தவிதமான தாக்கத்தை ஏற்படுத்தியது? சாம்பிளுக்கு சில இடங்களிலிருந்து நமது நிருபர்கள் நேரடி ரிப்போர்ட் செய்கிறார்கள்...**

• பிரசார வேனில் ஜெ.



# வெறும் 'ஜெ'தான்; 'ஜேஜே' இல்லை!

நுங்கம்பாக்கம் வள்ளுவர் கோட்டம் அருகிலுள்ள சுதந்தரதினப் பூங்கா அருகில், விரல் விட்டு எண்ணக்கூடிய அளவுக்கு மட்டுமே அ.தி.மு.க. தொண்டர்கள் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களை விட போலீஸின் எண்ணிக்கை பல மடங்காக இருந்தது. 'அம்மா எத்தனை மணிக்கு ஸார் வருவாங்க?' என்று ஒரு போக்குவரத்து இன்ஸ்பெக்டரிடம் விசாரித்த போது, 'தெரியாது ஸார்!' என்று எரிச்சலுடன் சலித்துக் கொண்டார் அவர்.

கார்ப்பரேஷன் ஊழியர்கள் தெருக்களை விழுந்து விழுந்து சுத்தம் செய்து கொண்டிருந்தார்கள். மேடைக்கருகே கையில் மைக்கை வைத்துக் கொண்டு, 'நமது சின்னம்?' என்று ஒருவர் கேட்க, மற்றவர்கள் 'ரெட்டை இலை' என்று குரல் கொடுத்தனர். திடீரென்று 'ராஜீவ் சின்னம்' என்று குரல் வரவே, அதற்கும் 'ரெட்டை இலை' என்று முழங்கினர் அ.தி.மு.க.வினர்! திரும்பத் திரும்ப 'ராஜிவ் சின்னம்' என்று குரல் எழுப்பப்படவே, தப்பு செய்து விட்ட உணர்வில் திருத்திக் கொண்டு 'கைச் சின்னம்' என்று குரல் கொடுத்தார்கள்! ஆனால் காங்கிரஸ்காரர்களை மும்முரமாகத் தேடியும் ஒருவரையும் காணவில்லை!

திடீரென்று தொண்டர்களுக்கு என்ன தோன்றியதோ தெரியவில்லை. கிசுகிசுவென்று பேசிக் கொண்டார்கள். அடுத்த பத்தாவது நிமிடத்தில் மேடையில் எம்.ஜி.ஆர். படம், அதற்கு மாலை! அதற்குள் மைக்கில் கரகரத்த குரலில் 'புரட்சித் தலைவி வந்து விட்டார்' என்று முழங்கவே, அக்கம்பக்கத்திலிருந்து மக்கள் ஓடி வந்தனர். போதாததற்கு போக்குவரத்தும் நிறுத்தப்படவே, சுமார் ஆயிரம் பேர் கொண்ட கூட்டம் அங்கே கூடி விட்டது.

ஓர் இளைஞர் கையில் கம்பை வைத்துக் கொண்டு, 'சாந்து பொட்டு சந்தனப் பொட்டு' பாடலுக்குச் சிலம்பாட்டம் ஆடிக் கொண்டிருந்தார். "போதும் நிறுத்தய்யா" என்று கூட்டத்திலிருந்து ஒருவர் குரல் கொடுத்தார்.

சரியாக 4.20க்கு ஜெ.யின் பிரசார வேன் வந்து சேர்ந்தது. கமிஷனர் வீரராகவன் தவிர, ஜெயலலிதாவின் மெய்க்காப்பாளர் தேவாரமும் வந்திருந்தார்.

கறுப்பு கலர் ஓவர்-கோட்-புடைவை. அதில் சிவப்பு கலரில் பூக்கள். காதில் வைரத் தோடு ('என்னமா டாலடிக்குது பாத்தியா!'). சும்மா சொல்லக் கூடாது... தகதகக்கும் மேக்கப் முகத்தோடு காட்சியளித்து பெண்களை அசத்தினார் ஜெ!

"இது தர்மத்துக்கும் அதர்மத்துக்கும் நடக்கும் போட்டி", "கருணாநிதி பெண் குலத்துக்கே

• ஏற்பாட்டு டென்ஷனில் அமைச்சர்கள் செல்வகணபதி, முத்துசாமி



எதிரி!'' என்பது போன்ற வழக்கமான பேச்சுக்கள் எதுவும் இல்லாமல், சென்னை நகர பிரச்னைகளைப் பற்றி மட்டுமே பேசினார் ஜெ. செவ்வக அட்டைகளில் பெரிய எழுத்தில் எழுதி வைக்கப்பட்டிருந்ததை, கண்ணாடி போடாமல் (வெள்ளெழுத்து!) வாசித்தார்:

"கருணாநிதி எத்தனை விளையாட்டரங்கம் கட்டினார்? எத்தனை விளையாட்டுப் போட்டிகளை நடத்தினார்?

• மக்களை விட போலீஸ் அதிகம்!



எத்தனை விளையாட்டு வீராங்கனைகளை கௌரவப்படுத்தினார்? வீராணம் திட்டத்தில் ஊழல் செய்தார். ஆனால் நாங்கள் வீராணத்திலிருந்து தண்ணீர் கொண்டு வர புதுத்திட்டம் தீட்டியுள்ளோம்!'' என்றார் ஜெ.

அவர் பேச்சுக்கு மக்களிடம் எந்த எழுச்சியும் இல்லை. ''அம்மா எப்படி இருக்காங்கன்னு பார்க்கறதுக்கு வந்தேன்'' என்றார் சந்திரா என்ற பெண்மணி.

"இந்தம்மா ஸப்போர்ட்ல சசிகலா குடும்பம் பண்ணற அநியாயத்துக்குக் கணக்கே கிடையாது. எதிர்க்கட்சிகளோட முக்கியமான குற்றச்சாட்டே அதுதான். அப்படியிருக்கும் போது என்ன தைரியம் இருந்தா அந்தம்மாவையும் கூட்டிக்கிட்டு பிரசாரத்துக்கு வருவாங்க, நாம என்ன முட்டாளா?'' என்று ஆவேசத்துடன் கேட்டார் பெட்டிக் கடை வைத்திருக்கும் மாணிக்கம்.

வள்ளுவர் கோட்டம் பஸ் ஸ்டாப்பில் காத்திருந்த மக்கள், பஸ்கள் நிறுத்தப்பட்டதால் எரிச்சலடைந்து, 'ஆபீஸ் விடற சமயத்திலே தான் இப்படிப் போணுமா. ராத்திரில போய் வோட்டு கேக்கட்டுமே!'' என்று எரிச்சலில் முணுமுணுத்தனர்.

நந்தனம் சந்திப்பு. வழக்கம் போல், அமைச்சர்கள் செல்வகணபதி, மதுசூதனன் தவிர முத்துசாமியும் ஏற்பாடுகளை முன்னதாகவே வந்து கவனித்துக் கொண்டிருந்தார். "என்ன ஸார், எப்படியிருக்கு? என்று முத்துசாமியிடம் கேட்ட போது, "1991ல் இருந்த எழுச்சி இருக்கு ஸார்!'' என்றார் சுரத்தில்லாமல். "எதிர்ப்பு அலை பலமாக இருக்குன்னு சொல்றாங்களே?'' என்றபோது, ''அது பத்திரிகைகள் கிளப்பி விட்டிருக்கிற எதிர்ப்பு அலை!'' என்றார் வெடுக்கென்று.

எத்தனை பேர் வந்து ஏற்பாடுகளைக் கவனித்தும் கூட்டம் சுமார் இருநூறு பேரைக் கூடத் தாண்டவில்லை! இதைக் கண்டதும் டெம்போ டிராவலருக்குள் இருந்த ஜெ. முகம் எரிச்சலடைந்தது பளிச்சென்று தெரிந்தது. மதுசூதனனைக் கூப்பிட்டார். கையில் செல்லுலருடன் இருந்த மது, அம்மாவுக்கு அருகில் ஓடினார். கண்ணாடியை இறக்கி விட்டு மதுவை ஒரு பிடிபிடித்தார். மது முகத்தில் ஈ ஆடவில்லை. ஜகா வாங்கினார்.

தமது பேச்சை மறுபடியும் வாசித்தார் ஜெ.

கோடம்பாக்கத்திலுள்ள லிபர்டி சந்திப்பு. மாலை நான்கு மணிக்கு ஜெ. வருவதாகச் சொன்னார்களாம். நாம் நான்கரைக்குச் சென்றபோதும் பத்துப் பதினைந்து போலீஸ்காரர்களைத் தவிர வேறு யாருமே இல்லை!

பிளாட்பாரக் கடைகள் இருந்தன. போலீஸார் கண்டு கொள்ளவே இல்லை. வழக்கம் போல் வியாபாரம் நடந்தபடியே இருந்தது. ஜெ. பேசுவதாக இருந்த சந்திப்புக்கு அருகிலேயே மாநகராட்சி குப்பைத் தொட்டியொன்று நிரம்பி வழிந்தும் ஊழியர்கள் கண்டு கொண்டதாகவே தெரியவில்லை.

இதற்கிடையில் வயதான பெண்மணி ஒருவர் ஓர் ஆட்டோவில் மிக இலேசாக அடிபட்டுவிட, அருகிலிருந்த போலீஸ்காரர்கள் அந்தப் பெண்மணிக்கு முதலுதவி செய்தது ஆச்சரியமாக இருந்தது!

ஐந்து மணியளவில் எம்.ஜி.ஆரைப் போல் வேடமணிந்த ஒருவர் ஒரு தனி ஜீப்பில் செல்ல, பின்னால் 'புரட்சித் தலைவி' வந்து கொண்டேயிருப்பதாக மைக்கில் அலறினார்கள். அப்போதுதான் போலீஸ்காரர்கள் போக்குவரத்தை நிறுத்தினார்கள். போக்குவரத்தை நிறுத்தியதால் வேறு வழியின்றி கூட்டம் சேரலானது!

சரியாக ஐந்தரை மணிக்கு வந்தார், ஜெ. முதல் இடங்களில் வாசித்த அந்தப் பேச்சின் ஒரு பகுதியையே இங்கும் வாசித்தார். மற்றபடி ஜனங்களிடம் உற்சாகம் ஏதும் தெரியவில்லை.

**- ப்ரியன், தில்லப்பா, பிரின்ஸ்.**

படங்கள் : **'பேஜர்' கே. மூர்த்தி.**

✉ ரஜினி என்ன செய்ய வேண்டும் என்று தெளிவாகச் சுட்டிக்காட்டிய தலையங்கம் அருமை. கலைஞரின் தலையோடு உதயசூரியனை இணைத்து வெளியிட்டிருக்கும் கார்ட்டூன் அதைவிட அருமை. அரஸின் தூரிகைக்கு என் முத்தங்கள்.
கப்பராயர்புரம், இ. சுபாகரன்.

✉ தலையங்கத்தில், ரஜினி பிரசாரம் செய்ய வர வேண்டும் என்று கூறியிருந்தது நியாயமே! வோட்டுக்கள் உட்கட்சி பிளவு, நாலுமுனைப் போட்டி, ஜாதிய முறைப் பிரிவு என்று பலவாறாகப் பிரிவதன் மூலம் மீண்டும் அ.தி.மு.க.வே ஆட்சிக்கு வரும் அபாயம் இருக்கிறது. மக்களுக்கு இப்போது ஏற்பட்டிருக்கும் விழிப்புணர்வு மங்காமல் இருக்க ஏதேனும் ஒரு வீரியமுள்ள தூண்டுதல் தேவைதான்!
திருநெல்வேலி - 11, என். ஆர். ஸ்வாமி.

✉ தலையங்கம் கண்டேன். அதிமுகவை எதிர்த்தும், திமுக. கூட்டணியை ஆதரித்தும் நீங்கள் எத்தனை எழுதினாலும் ஜெயின் செல்வாக்கைக் குறைத்து விடமுடியாது. எம்.ஜி.ஆர். தொடங்கிய கட்சி என்கிற பெருமை, பிரசித்தி பெற்ற இரட்டை இலைச் சின்னம், நிலையான ஆட்சி தரும் சாமர்த்தியம், எல்லாவற்றுக்கும் மேல் பெண்களிடம் அ.இ.மு.க.வுக்கு உள்ள செல்வாக்கு இவைகளைக் குறைத்து மதிப்பிட வேண்டாம்!
இராஜன்நகர், எம். சுதா.

✉ இவ்வாரம், கலைஞரைத் தாங்கி வந்த அட்டைப்படமும் அருமை. உள்ளே கலைஞரின் பேட்டியும் அருமை! முதுமையின் கனிவும், அரசியல் முதிர்ச்சியும் ஆற்றலின் சிலிர்ப்பும் ஆழ்ந்த சிந்தனைகளும் ஒருசேரக் காணக்கிடைத்தன!
திருவிடைமருதூர், இடவை எழில்.

✉ 1973-74இல் PUBLIC MEN MISCONDUCT ACT என்ற பெயரில் OMBUDSMAN போன்ற ஒரு விசாரணை முறையைச் சட்ட வடிவில் தாம் கொண்டு வந்ததை, எம்.ஜி.ஆர். ஆட்சிக்கு வந்ததும் 'கறுப்புச் சட்டம்' என்று சொல்லி உடனடியாக ஒதுக்கித் தள்ளிவிட்டார் என்று கலைஞர் சொல்லியிருக்கிறார். 'PUBLIC MEN MISCONDUCT ACT' இல் யாராவது ஒருவர் இந்தச் சட்டப்படி அரசியல்வாதி, பதவி வகிக்கும் அமைச்சர், முதலமைச்சர் உள்பட ஊழல் செய்து விட்டதாகப் புகார் செய்தால் விசாரணை நடக்கும்; ஆனால் குற்றச்சாட்டு நிருபணம் ஆகாவிட்டால் குற்றம்சாட்டியவர் மீது மிக மிகக் கடுமையான நடவடிக்கை, அதிகபட்ச அபராதம், சிறைத் தண்டனை எல்லாமே உண்டு என்ற பயமுறுத்தலும் இந்தச் சட்டத்தில் உண்டு என்பது. இந்த கூரத்து குற்றவியல் சட்டமுறைக்கே புறம்பானது என்பதால்தான் எம்.ஜி.ஆர். அதைக் கறுப்புச் சட்டம் என்று சொல்லியிருக்கிறார்.
சென்னை - 40, எம்.என். நாராயணன்.

✉ "ரஜினி உண்மையைச் சொன்னதால்தான் அந்த வார்த்தைகளுக்கு மதிப்பிருக்கிறது" என்று கருணாநிதி குறிப்பிட்டுள்ளார். உண்மையை எல்லோரும்தான் சொல்கிறார்கள். எடுபடுகிறதா? உண்மையை மக்கள் ஏற்கும்படிச் சொல்வதற்கும் ரஜினி போல் ஒரு 'பர்சனாலிட்டி' வேண்டியிருக்கிறதே!
சிழ்நத்தம், இ.க. பாலசுப்பிரமணியன்.

✉ வோட்டுப் போடும்போதே நவீன முறையில் அடையாள அட்டை தயாரிக்கும் திட்டத்தில் சில குறைகள். 1. சராசரியாக 50% மக்கள்தான் வோட்டளிக்கிறார்கள். மற்றவர்களைத் தேடிப் பிடித்து அட்டை வழங்க வேண்டும். 2. வாக்காளர் பட்டியலில் பெயர்கள், விவரங்கள், அபத்தமான சிறு தவறுகளுடன் இருக்கும். அது அப்படியே பதிவாகும். 3. அடையாள அட்டை, பல நோக்கு கொண்டதாக இருக்க வேண்டும் என்றே மக்கள் எதிர்பார்க்கிறார்கள். எனவே கூடுதல் தகவல்களுடன் தனியாக எடுப்பதே சிறப்பு 4. தாங்கள் யாருக்கு வாக் களித்தோம் என்பதை இயந்திரமோ, இயக்குபவர்களோ கண்காணிப்பார்கள் என்ற அச்சம் மக்களுக்கு இருக்கும். இதனால் வாக்களிப்பு பாதிக்கப்படலாம்.
சிட்லபாக்கம், அ. ஷண்முகசுந்தரம்.

✉ 'அப்படி என்னதான் அம்மா பெரிய ஊழல் பண்ணிட்டாங்க' என்று தாய்க்குலங்கள் எழுப்பும் வினாவிற்கு, ப்ரியன் தொகுத்துக் காட்டிய அ.இ.மு.க. ஆட்சியின் ஸ்கோர் போர்டு சரியான தருணத்தில் தரப்பட்ட விடை. விடுபட்டவை ஏராளம்தான். இருப்பினும், அம்மாவுக்கு ராசியான கூட்டுத்தொகை என் ஒன்பது வருவதற்கேற்ப இன்னும் ஆறு அயிட்டங்களைச் சேர்த்திருக்கலாம்!
கல்யாணபுரம், அ. சம்பத்.

✉ பரபரப்பு மிக்க தேர்தல் சமயத்தில், தனி ஒருவன் இந்தச் சமுதாயத்தை எப்படித் திருத்த முடியும் என்பது பற்றி ஒரு அட்டகாசமான விறு உரையே ஆற்றியிருந்தார் சுஜாதா. வெல்டன்.
மொரட்டுப்பாளையம், க. நா. ராஜேஸ்வரன்.

## ரூ. 20 பரிசுக் கடிதம்

✉ 'நமது கண்களைச் சுற்றிக் கூட சில சமயங்களில் கண் கொசுக்கள் பறக்கின்றனவே, அதுவும் கண்ணீருக்குத்தான்!' என்ற 'கண்ணீர் குடிக்கும் பூச்சிகள்' துணுக்கு, அப்படியே மக்கள், அரசியல்வாதிகள், ஓட்டு ஆகியவற்றுடன் கரெக்டாக ஒத்துப் போகிறதே! சே! தேர்தல் நேரத்தில் என்ன ஒரு 'டைமிங்' துணுக்கு!
சென்னை - 1, கே. பாரதி.

பதிவு எண்: 26383




# கல்பதரு பெனிபிட் பண்டு லிமிடெட்

(கம்பெனிகள் சட்டப்படி பதிவு செய்து நிறுவப்பட்டது)
பதிவு அலுவலகம்: 134, ராசப்ப செட்டி தெரு, ☎ 5353241
(ஸ்ரீ கந்தகோட்டம் அருகில்) பார்க் டவுன், சென்னை-600 003.

**பிக்சட் டிபாசிட் திட்டம் மாத வட்டிக்கான காசோலைகள் முன் கூட்டியே வழங்கப்படும்**

| காலம் | 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|---|
| வருட வட்டி வீதம் | 14% | 15% | 16% | 17.5% | 18.5% | 19% | 19.5% | 20% * |



## குபேரன் வைப்பு திட்டம்

வட்டி 21% குறைந்த அளவு டிபாசிட் ரூ. 50,000/- காலம் : 5 வருடம்.
மாத வட்டிக்கான செக்குகள் முன்னதாகவே வழங்கப்படும்

## அமுத சுரபி டிபாசிட் திட்டம்



| டிபாசிட் தொகை | காலம் | கிடைக்கும் தொகை |
|---|---|---|
| ரூ. 5,600 | 15 வருடம் | ரூ. 1,00,000 |
| ரூ. 7,000 | | ரூ. 1,25,000 |

## கல்பதரு மணிபேக் திட்டம்



அ) பிரதி மாதம் ரூ.100/- வீதம் தொடர்ந்து 15 வருடம் செலுத்த வேண்டும்.
முதல் 5ம் ஆண்டு முடிவில் நீங்கள் செலுத்திய ரூ. 6000/-ஐ பெறுவீர் !
2வது 5ம் ஆண்டு முடிவில் மீண்டும் ரூ.6000/-ஐ பெறுவீர் !
3வது 5ம் ஆண்டு முடிவில் ரூ.51,000/-ஐ பெறுவீர் !

**முதியவர் நலத்திட்டம்: வயோதிகர் விதவைகள் கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.**

| தொகை | காலம் | வட்டிவீதம் |
|---|---|---|
| ரூ. 10,000 | 12 மாதங்கள் | 20% |
| ரூ. 10,000 கீழ் | | 19% |

**சேமிப்பு டிபாசிட் திட்டம் - 10% வரை வட்டி வழங்கப்படும்**



**கடன்** நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும் சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும்

வட்டி விகிதம் ரூ.1.95

அலுவலக நேரம் : காலை 8.30 முதல் 12.30 வரை மாலை 2.00 முதல் 6.00 வரை ஞாயிறு காலை 8.30 முதல் 12.30 வரை

பயன் பெற ரூ. 5/- செலுத்தி பங்குதாரர் ஆவீர். (செவ்வாய் விடுமுறை) பாதுகாப்பு • சேவை • சுபிட்சம்

1% ஊக்கத் தொகை 1.5.96 முதல் 31.5.96 வரை

# ஓர் அதிபர், எலக்ட்ரீஷியன் ஆன கதை!

வலேசா. எண்பதுகளில் போலந்து நாட்டு மக்களின் நரம்புகளை முறுக்கேற்றிய பெயர்.

கம்யூனிஸம் தவிர வேறு எந்த சித்தாந்தத்தையும் சிந்திக்கக்கூடத் தயாராக இல்லாத மக்களிடம், தாம் தொடங்கிய 'சாலிடாரிட்டி' என்கிற தொழிற் சங்கத்தையே மக்கள் இயக்கமாக மாற்றி, போலந்தில் கம்யூனிஸத்தின் மரணத்துக்குக் காரணமாக இருந்த ஐம்பத்தொரு வயது படிக்காத தொழிற்சங்க மேதை.

டான்ஸ்க் கப்பல் தளத்தில் எலெக்ட்ரீஷியனாக இருந்து சாலிடாரிட்டியின் தலைவராகி, போலந்து நாட்டின் அதிபராக உயர்ந்தவர்.

1989ம் ஆண்டு தேர்தலில் அந்த இயக்கம் வெற்றி பெற்றபோது போலந்து நாட்டுப் பொதுமக்களில் ஐந்தில் ஒரு பகுதியினர் வலேசாவின் தலைமையில் தங்களை இணைத்துக் கொண்டிருந்தார்கள்.

இப்போது?

ஆறு வருடங்கள், கதையை அடியோடு மாற்றி விட்டன!

நாட்டின் அதிபரானதும் வலேசாவின் போக்கில் மாறுதல்கள். முரட்டுத்தனமாகப் பேசுவது. தலைக்கனம். 'நம்மை மிஞ்ச ஆளில்லை' என்ற இறுமாப்பு. எல்லாமாகச் சேர்ந்து கொண்டன.

காலில் விழும் கலாசாரம் இல்லாத நாடு போலந்து. எனவே மக்கள் விழித்துக் கொண்டார்கள்.

'வலேசாவை நம்பி இனிப் புண்ணியம் இல்லை' என்று தீர்மானித்தார்கள்.

விளைவு? சாலிடாரிட்டி சுக்கலாக நொறுங்கிப் போயிற்று. கிட்டத்தட்ட ஆணி அடிக்கப்பட்டுவிட்ட நிலையில் சவப்பெட்டியிலிருந்த கம்யூனிஸம், மீண்டும் உயிர்த்தெழுந்தது!

சமீபத்தில் நடைபெற்ற போலந்து பொதுத் தேர்தலில் வலேசா விரட்டப்பட்டார்; கம்யூனிஸ்ட் தலைவர் க்வாஸி நியூஸ்கி அதிபரானார்.

இந்தத் தோல்வி வலேசாவுக்குக் கசப்புதான். இருந்தாலும் வேறு வழியில்லை. பார்த்தார். எந்தக் கப்பல் தளத்தில் எலெக்ட்ரீஷியனாக வேலை பார்த்தாரோ, அதே டான்ஸ்க் கப்பல் தளத்துக்குத் திரும்பிவிட்டார். யூனிஃபார்ம் போட்டுக் கொண்டு அதே எலெக்ட்ரீஷியன் வேலை!

நிர்வாகம் எல்லோருக்கும் கொடுப்பது போல வலேசாவுக்கும் புதிய அடையாள அட்டையை வழங்கியது. 'எண் 878' என்ற அட்டையைத் தம் சட்டையில் மாட்டிக் கொண்டு, போலந்தின் முன்னாள் அதிபர் மாதம் 250 அமெரிக்க டாலர் சம்பளத்துக்கு வேலை பார்க்கிறார்! கிட்டத்தட்ட எட்டாயிரம் ரூபாய். நம்மூர் அமைச்சர்களின் ஒரு நாள் செலவுக்கும் குறைவு என்றால் தப்பில்லை!

முன்னாள் ஜனாதிபதிகளுக்கு பென்ஷன் கொடுக்கும் சட்ட விதிகள் ஏதும் போலந்தில் இல்லை. பதவியில் இருக்கும்போது பணம் சேர்க்கவும் வழியில்லை! தம் வாழ்க்கைக் கதையை 'வார்னர் பிரதர்ஸ்' நிறுவனம் திரைப் படமாக்க உரிமை கொடுத்திருக்கிறார் வலேசா. அதற்குச் சன்மானமாகப் பத்து லட்சம் டாலர்கள் கிடைத்தன.

இப்போது பதவி ஏற்றுள்ள அரசு, வலேசாவுக்குப் பென்ஷன் தரலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறது. அப்படி ஒரு சட்டம் வந்தால் அவரால் கொஞ்சம் சமாளிக்க முடியும்.

பழைய வேலையில் மீண்டும் சேர்ந்ததும் கப்பல்தளத்தின் நிர்வாகத்துடன் பேச்சு வார்த்தை நடத்தியிருக்கிறார் வலேசா. என்னவாம்?

'அமெரிக்காவில் சில இடங்களில் 'லெக்சர்' கொடுக்க அழைப்பு வந்திருக்கிறது. சில நாட்கள் போய் வர லீவ் வேண்டும்...'

-ராணிமைந்தன்



• வலேசா

அண்டாவைக் குடுத்து வோட்டுக்
கேட்டாங்க. ஃபுல்லா தண்ணி
பிடிச்சுக் குடு; போடறேன்னேன்.
எப்படி நம்ம ஐடியா?

ஒரு பக்கம் பார்த்தா தேவாரம்
மாதிரி இருக்கு; இன்னொரு பக்கம்
பார்த்தா வீரப்பன் மாதிரி இருக்கு.
கண்ணே பட்டுடும்!

ஐயய்யோ... சைக்கிளுக்கும்
கைக்கும்
சம்பந்தமில்லீங்க...!

எலக்ஷன் ரிசல்ட்டைப்
பத்தி நமக்கென்ன கவலை?
இலவசக் கல்யாணமா பண்ணிக்கப்
போறோம்?ம்?

சீசனு






ஏதோ ஆசையில கட்டிப் புடிக்கறோம்னு நினைச்சீங்களா? ஆரத்தி எடுத்தது போதாதுன்னு கால்ல வேற விழுந்துடப் போறீங்களோன்னு தடுக்கறோம்...

# ங்கு ஏத்த ஸ்டில்ஸ்!




# ஃபிக்சட் டெபாசிட் சேகரிப்பு விழா

## ஃபிக்சட் டெபாசிட்

| காலம் | குறைந்த பட்ச டெபாசிட் | வட்டி விகிதம் | ஊக்கத் தொகை |
|---|---|---|---|
| 6 மாதம் | 10,000 | 24% | 1% |
| 1 வருடம்<br>2 வருடம்<br>3 வருடம் | 10,000 | 27% | 3%<br>5%<br>7% |

## மகளிர் உடனடி வட்டி திட்டம்

| டெபாசிட் தொகை | காலம் | உடனடி வட்டி | ஊக்கத் தொகை |
|---|---|---|---|
| 10,000 | 6 மாதம் | 900 | 1% |
| 10,000 | 1 வருடம் | 2400 | 2% |

18% விதம் 6 மாத வட்டி முன்னதாக வழங்கப்படும். 24% விதம் 1 வருட வட்டி முன்னதாக வழங்கப்படும்

## பென்ஷனர் பெர்பெக்ட் திட்டம்

| டெபாசிட் தொகை | காலம் | மாத வட்டி விகிதம் | ஊக்கத் தொகை | முதிர்வுத் தொகை |
|---|---|---|---|---|
| 10,000 | 24 மாதம் | 200 | 3% | 12,000 |
| 25,000 | 24 மாதம் | 500 | 5% | 30,000 |
| 50,000 | 24 மாதம் | 1000 | 9% | 60,000 |

## க்யூமுலேடிவ் டெபாசிட்

| டெபாசிட் தொகை | காலம் | முதிர்வுத் தொகை | வருட வட்டி விகிதம் | ஊக்கத் தொகை |
|---|---|---|---|---|
| 12 மாதம் | 10,000 | 13,000 | 30% | 3% |
| 24 மாதம் | 10,000 | 16,000 | 30% | 5% |
| 36 மாதம் | 10,000 | 20,000 | 33% | 7% |
| 60 மாதம் | 10,000 | 30,000 | 40% | 9% |

அறிமுகப்படுத்துபவருக்கு 1% ஊக்கத் தொகை வழங்கப்படும்
மாதந்திர வட்டி பின்தேதியிட்ட காசோலை மூலமாக முன்னதாக வழங்கப்படும்

**ஈசன் குருப் கம்பெனிகள் :**

ஈசன் பில்டர்ஸ் ★ பெனிபிட் பண்டு ★ பிராபர்டீஸ் பைனான்ஸ் ★ டிரான்ஸ்போர்ட்



**ஈசன் இன்வெஸ்ட்மென்ட்ஸ் (MADRAS)**

நெ.66, பாண்டி பஜார் (பனகல் பார்க் அருகில்)
தியாகராய நகர், சென்னை – 600 017. போன் : 4341059, 4345261

**ஈசன் – சிறந்த நம்பிக்கை**

# சீராகுமா சித்திரைக்குளம்?

## குளத்தில் கொட்டப்படும் 23 லட்சம்!

மயிலாப்பூரில் உள்ள சித்திரைக் குளம் இருபத்தேழு லட்ச ரூபாய் செலவில் சீர் செய்யப்படும் என்று சமீபத்தில் ஒரு செய்தி வந்தது. கபாலீசுவரர் கோயில் குளத்தைப் போலவே தூர் வாரி, புல் பூண்டுகளை அகற்றி, 1½ அடி ஆழம் திடமான களிமண் நிரப்பி, அதன் மேல் ½ அடிக்கு மணல் பரப்பிச் சமன் செய்த பிறகு, ஐந்து அல்லது ஆறு அடி தண்ணீர் நிரப்புவது என்று முடிவானது. இது மூத்த நீரியல் துறை இஞ்சினியர் ஆர். கே. மூர்த்தியின் யோசனை. ஆனால் இதுவரை குறிப்பிடத்தக்க வேலை எதுவும் நடைபெறவில்லை. தேர்தல் சூடுபிடிக்கத் தொடங்கிய நேரத்தில் திடுதிப்பென சீரமைப்புப் பணிகள் தொடங்கப்பட்டதும், மூப்பனார், கலைஞர் எல்லாம் அதைக் கடுமையாக எதிர்த்து, பணியை நிறுத்த வேண்டியதும் ஒரு புறம் இருக்க...

ஆர்.கே. மூர்த்தி சொன்னார் :

"கபாலி கோயில் குளத்தில், 'ஆகம சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறது' என்று தாமரை போட்டார்கள். இதற்குப் பதினைந்தாயிரம் ரூபாய்க்கு காண்ட்ராக்ட் இருக்கிறது; கோயிலுக்கு இது வருமானமாகக் கிடைக்கும் என்றார்கள். நான், 'போட வேண்டாம்' என்று தடுத்தேன். இப்போது தாமரை போட்டால், பிறகு ஒரு லட்சம் ரூபாய் வரை செலவு வைக்கும் என்று அதிகாரிகளிடம் சொன்னேன். கேட்கவில்லை.

"குளத்தில் எக்காரணம் கொண்டும் செடி கொடிகளை நடக்கூடாது. பாருங்கள், சரிசெய்த இந்த நாலு வருடத்தில், ஒரு சதுர அடிகூடத் தண்ணீர் தெரியவில்லை. தழை மண்டி விட்டது. தண்ணீர் கூடக் குறைந்து கொண்டே போகிறது. சீக்கிரமே குளம் முழுதும் வற்றிவிடக் கூடும்.

இரண்டடி ஆழம் வரை தூர் எடுத்து, தேங்கியிருக்கும் கழிவுகளை முதலில் அகற்ற வேண்டும். மேற்பரப்பை உருப்படியாகச் சீர்செய்ய, கெமிகல்களை உபயோகித்து தழை, செடி, கொடிகளை அறவே நீக்க வேண்டும்.

"இரண்டு மூன்று ஆழ்துளைக் கிணறுகளை வெட்டி, மின்சாரத்தில் இயங்கும் சப்மெர்ஸிபிள் குழாய்களை நிறுவ வேண்டும். தினசரி சில மணி நேரங்கள் பம்புகளை இயக்கி, தண்ணீர் மட்டம் ஓரளவுக்கு இருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். துணி துவைக்கவோ, குளிக்கவோ யாரும் குளத்தைப் பயன்படுத்தாமல் வேலி போட வேண்டும்.

"சித்திரைக் குளத்தைப் பொறுத்தவரை, குளத்தின் படுகை, தரைமட்டத்திலிருந்து பத்தடி ஆழத்தில் இருக்கிறது. ஆனால் நிலத்தடி ஆழ் நீர் மட்டம் (இதை பைசோமெட்ரிக் சர்ஃபேஸ் என்பார்கள்) தரையிலிருந்து 31 அடி மட்டத்தில் இருக்கிறது.

"அதனால் பத்தடி ஆழத்தில் உள்ள படுகையில் கபாலி குளம் போலவே, ஒன்றரை முதல் இரண்டடிக்குத் திடமான களிமண் போட்டு, நீரைச் சுத்தமாக வைத்திருக்க, அதன் மேல் அரை அடிக்கு மணல் பரப்பி விட வேண்டும்.

"குளத்தின் நான்கு பக்கங்களும் மிக மோசமான நிலையில் இருக்கின்றன. இதைப் பழுது பார்க்காவிட்டால் குளத்தின் நீர் வெளியேறிவிடும். அதனால், பக்கவாட்டில் செங்கல் கொண்டு கட்டி, சிமெண்ட் பூச்சுப் பூசி உறுதியாக்க வேண்டும்.

"மூன்று போர்வெல்களைப் போட்டு, மோட்டாருடன் பம்பை இணைத்துவிட்டால், மேல் மட்டத்தில் தண்ணீர் இருந்து கொண்டே இருக்கும். இல்லை என்றால், கோடை காலத்தில் நீர் கிட்டத் தட்ட ஆவியாகிப் போய் விடும்.

• சித்திரைக்குளம்



"இந்தக் காரியங்களைச் செய்தால்தான் குளத்தில் தண்ணீர் இருக்கும். வீணாகப் பணத்தைச் செலவு செய்து, தண்ணீர் இல்லாமல் பாழான குளத்தைப் பார்த்துக் கொண்டிருப்பது வேதனை தரும் விஷயம்."

- சாருகேசி



"இப்பல்லாம் சின்ன வயசுலேயே ஜனநாயக உணர்வு வந்துடுது பாருங்க..."



"ஏழைகளின் நலனுக்காக ஏராளமான திட்டங்கள் அமுல்படுத்தியிருக்கோம். அந்தத் திட்டங்களால் அவங்க பயனடைய வேண்டாமா...? அதனால் ஏழைகளை ஏழைகளாகவே வைத்திருக்க ஓர் அற்புதத் திட்டம்..."

விளையாட்டு வினையாகிறது... ஏதோ வசனமாகச் சொல்லவில்லை. உண்மையிலேயே மல்யுத்தத்தை ஒரு வீர விளையாட்டாகக் கருதிப் பயின்றவர்கள் அதைத் தவறாக உபயோகித்துப் பணம் சம்பாதிக்கிறார்கள்!

விளையாட்டுப் போட்டிகளில் பங்கேற்கும் மல்யுத்த அணிகளில் இடம்பெற முடியாமல் போனவர்கள் இவர்கள். ஆனால் உடலில் வலுவும், நெஞ்சில் உரமும் தோள்களில் தினவுமாக சம்பாதிக்க வேறு வழியும் தெரியாமல் திண்டாடுபவர்கள். பெரும்பாலும் கல்வி அறிவு இல்லாதவர்கள். இந்த பலவீனத்தையே அரசியல்வாதிகள் பயன்படுத்திக் கொள்கிறார்கள். போர்க்குணத்தைப் பயிற்சிமூலம் வளர்த்துக் கொண்ட வீரர்களை சமூக விரோத (அரசியல் விரோத?) காரியங்களுக்குக் கூலியாட்களாக அமர்த்திக் கொள்கிறார்கள்.

வட இந்திய வேட்பாளர்கள் பலர், தேர்தல் சமயத்தில் இந்த 'கூலி'யாட்களை தங்கள் பாடிகார்டுகளாகவே நியமித்துக் கொள்கிறார்கள். தேர்தல் முடிவதற்குள், ஆட்கள் கிட்டத்தட்ட 25,000ரூபாய் வரை சம்பாதித்து விடுகிறார்கள். ஒரு வாக்குச் சாவடியைக் கைப்பற்ற மட்டும் பத்து முதல் பதினைந்தாயிரம் ரூபாய் வரை கூலி!

# தேர்தல்

கட்சிக் கண்ணோட்டமின்றி எல்லா கட்சியினருக்கும் இந்தத் 'திண்தோளர்'களின் 'சேவை' கிடைக்கிறது. ஒரே நபர் இன்று பி.ஜே.பி.; நாளை காங்கிரஸ் என்று 'சமநோக்கோடு' வேலை பார்ப்பார். தினக்கூலி அடிப்படையில் சம்பளம்!

"எங்கள் வேலை ரொம்ப சுலபம்..." என்கிறார் மல்யுத்த வீரர்களுள் ஒருவரான ராஜேஷ்குமார்.

"எங்கள் 'ஆள்' மேடையில் பேசும்போது யாராவது கலாட்டா செய்தால் அடித்துப் போட வேண்டியது. அவ்வளவே. மற்ற நேரங்களில் அவருக்குத் தீங்கு எதுவும் வராமல் கண்காணிக்க வேண்டும். வாக்குச்




* வாடகைக்கு வீரர்கள்!

சாவடிகளைக் கைப்பற்றும் போதுதான் பொதுமக்கள், பத்திரிகையாளர்கள், அதிகாரிகள், போலீஸ் என்று எல்லார் கண்ணிலும் மண்ணைத் தூவ வேண்டி வரும்... அதுக்குத்தான் கூடுதல் பணம் கேட்கிறோம்..."

வி.ஐ.பி. பாதுகாவலராக இருக்கும் வரை

# ...தோளர்கள்!

மல்யுத்தர்களுக்கு ஐந்து நட்சத்திர மரியாதை–ஏ.ஸி. கார் சவாரி, ஆடம்பர இலவச உணவு என்று பிற நாட்களில் எட்டாத ராஜ போகம்! இதற்கு மயங்கித்தான் இத் தொழிலில் ஈடுபடுகிறார்கள் பெரும்பாலான இளைஞர்கள். இவர்களில் அனேகர் ஹரியானாக்காரர்கள்– மல்யுத்த பயிற்சி தவிர 'தேர்தல் டியூட்டி'க்காக டில்லியில் இவர்களுக்குச் சிறப்புப் பயிற்சி வழங்கும் மையம் வேறு இருக்கிறதாம். சேஷன் கவனித்தாரா?

-ஜி.எஸ்.எஸ்.

நன்றி : அவுட்லுக்




"இல்லாத கட்சிக் கட்டுப்பாட்டை மீறின துக்கே இந்த கதி...!"




"எங்க கட்சி செலவுகளைக் கணக்கு வைச் சுக்க இரண்டு சார்டர்ட் அகவுண்டன்ட்களை நியமிச்சிருக்கோம்... அவங்க சம்பளத்தையும் தேர்தல் செலவுல சேர்க்கணுமா...?"

- இந்தியன் ஃபீச்சர்ஸ் சிண்டிகேட்




# புத்தகம் இல்லாத வகுப்பறைகள்!

**மா**ணவர்கள் பொதி மாடுகள் போல் நோட்டுப் புத்தக மூட்டைகளைச் சுமந்து முதுகு வளைந்து போய்த் திண்டாட வேண்டாம். ஆசிரியர்கள் ஹோம்வொர்க் நோட்டுக்களைக் கையொடியத் திருத்தி, தூக்கமிழக்க வேண் டாம்...! நோட்டுப் புத்தகங்களே இல்லாதவொரு புதிய கல்விமுறை அறிமுகமாகிறது!

கோபாலபுரம் நேஷனல் இங்கிலீஷ் பள்ளி இந்த முறையை முதல் வகுப்பு தொடங்கி எட்டாம் வகுப்பு வரையிலான மாணவர்களுக் கென்று வருகிற ஜூன் முதல் அறிமுகப்படுத்து கிறது.

"இருபது வருடங்களாகவே இதற்கு யோசித்து வருகிறோம்!" என்கிறார் பள்ளியின் தலைமை யாசிரியை மோகனா சந்திரசேகர்.

"ஏதாவது ஒரு புதிய வழியைக் கண்டுபிடித் தால்தான் இப்போதைய கல்வி முறையை மாற்ற முடியும் என்று தீர்மானித்தோம். இந்த 'நோட்புக் இல்லா கல்வி முறை' யோசனை உருவாகி வெளிப் படுத்தப்பட்டதும் மாணவர்களின் பெற்றோர் கள் பலர் மிகவும் பாராட்டினார்கள். நேரில் பாராட்டியவர்கள் தவிர, 'உதவி தேவைப்பட் டால் செய்யக் காத்திருக்கிறோம்' என்று எழுதி அனுப்பியவர்களும் உண்டு! மாணவர்களைப் பற்றிச் சொல்லவே வேண்டாம்... மிக மிக ஆவ லாய் இருக்கிறார்கள் - புதிய முறையில் பாடங் கள் தொடங்க..."

**நோ**ட் புக்குகளுக்கு டாட்டா சொல்லத் தூண்டிய முதல் காரணம்:

உருப்போடும் பாடத்திட் டத்திலிருந்து விடுதலை விரும்பி யதுதான்! நோட் புக்குகள் இருக்கும் வரை வகுப் பறைகள் வெறும் டிக்டேஷன் பயிற்சியாகவும் பரீட்சைகள் வெறும் நினைவாற்றல் சோதனை யாகவுமே இருந்துவிடும் என உணர்ந்தார்கள். மாணவர்கள் நோட்ஸ் எழுதுவதற்குப் பதில் பாடத்தைக் கவனித்தால் மனத்தில் பதியும்; சந்தேகங்கள் எழும்; கேள்விகள் கேட்டுத் தெளிவு பெறுவார்கள் என்று புதிய முறையில் ஏராளமாக நம்பிக்கை வைத்துள்ளார்கள்.

அப்படியானால் எழுதும் வேலையே கிடை யாதா...?

"ஓ! உண்டு... வொர்க் ஷீட்ஸ் என்று விடை எழுத வசதியாக இடம் விடப்பட்ட கேள்வித்தாள்களைத் தயாரித்து வைத்துள்ளோம். ஒவ்வொரு பாடத்துக்கும் பல வொர்க் ஷீட்டுகள் உண்டு. அந்தந்தப் பாடப் பகுதி முடிந்ததும் அதற் குரிய வொர்க் ஷீட்டைக் கொடுத்து விடைகள் எழுதச் சொல்லி வாங்கிக் கொள்வோம். விஞ் ஞானத்தில், 'மனித உடலின் பாகங்களைக் குறி' என்றால், மாணவன் அதை விடைத்தாளில் குறித்துக் கொடுக்க வேண்டும். அதேபோல் சைபீரியாவிலிருந்து இந்தியா வரும் வழியில் என்னென்ன நாடுகள் உள்ளன? முக்கிய நகரங் கள் எவை? என்று வொர்க் ஷீட் வரைபடத்தில் குறிக்க வேண்டும். தமிழ், ஹிந்தி, என்ற மொழிப் பாடங்களுக்குக் கூட நோட்புக்குகள் கிடையாது. வீட்டில் கணக்குப் போடவும் டிக்டேஷனுக்கும் (ஸ்பெல்லிங் பரிசோதனை) மட்டுமே நோட்டுக் கள்!" என்கிறார் தலைமையாசிரியை.


• மோகனா சந்திரசேகரன்

மாணவர்களைப் பத்து பத்துப் பேர் அடங் கிய குழுக்களாகப் பிரித்து, குழுவுக்கு ஓர் ஆசிரி யரைப் பொறுப்பாக்கப் போகிறார்களாம். இதன் மூலம் தனிப்பட்ட கவனம் செலுத்தி, பலவீன மான மாணவர்களுக்கு உதவ வாய்ப்பு அதிகரிக் கின்றது. இதற்கென ஆசிரியர்களுக்குச் சிறப்புப் பயிற்சி அளிக்கப்பட்டுள்ளதாம். மாதம் ஒரு முறை அசைன்மெண்ட் ஷீட்டுகளை வாங்கி, பெற்றோருக்கும் அனுப்பி கையெழுத்துப் பெறப் போகிறார்கள்.

"இந்த முறை வெற்றியடைந்தால் மற்ற வகுப்புகளுக்கும் இதை அறிமுகப்படுத்துவோம். மேலும், நான்கைந்து ஆண்டுகளுக்குள், பாட நூல்களே இல்லாமல் கூட வகுப்புகள் எடுக்கும் சூழ்நிலை வரும்" என்கிறார் மோகனா சந்திர சேகரன்.

வருடாந்திர பட்ஜெட்டில் கணிசமாக மிச்சம் பிடிக்கக் கூடிய பெற்றோர், அப்போதாவது குழந் தைகளுக்குப் புத்தகங்கள் (பாடப் புத்தகங்கள் அல்ல...) வாங்கிக் கொடுத்தால் சரிதான்!

**- சாருகேசி**

# பாலம்



●● திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம் 19-ஆவது அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் வரலாறு எழுத முயற்சி செய்கிறேன். அவரது இளமைக் காலம், கல்வி பற்றி அறிந்தவர்கள் எனக்கு எழுதினால் உதவியாக இருக்கும். நூல்கள் இருந்தாலும் தெரிவிக்கவும்.

*– பொன். முருகையன்,*
*15, தெற்கு வீதி,*
*திருப்பனந்தாள் – 612 504.*

●● GEORGE GAMON எழுதிய Mr. Tompkins in Wonderland, மற்றும் GUY MURCHIE எழுதிய Men on the Horizon முதலான புத்தகங்கள் தேவை. விலை விவரங்களுடன் எழுதவும்.

*– என். ஹரிஹரசுப்பிரமணியன்,*
*12, முதல் மெயின் ரோடு,*
*பொன்மேனி, ஜெயநகர்,*
*மதுரை – 625 010.*

●● குறைந்த முதலீட்டில் வீட்டிலேயே செய்யக்கூடிய இருபது வகையான குடிசைத் தொழில்கள் தொடங்க ஆலோசனை தருகிறேன்.

*– எம். மணிமலர்,*
*6/332, கணேசபுரம்,*
*சிறுமுகை – 641 302.*

●● பேராசிரியர் டி.வி. மகாலிங்கம் எழுதிய Administration and Social life Under Vijayanagar Empire என்ற புத்தகம் தேவைப்படுகிறது. படித்து விட்டு சில மாதங்களில் திருப்பித் தருகிறேன். விலைக்கு வாங்கவும் தயார்.

*– இ.க. இராமகிருஷ்ணன்,*
*1–97, திருவண்ணாதபுரம்,*
*கிழத்தம் (அ) 627 353*

●● தமிழ் வளர்ச்சிக் கழகம் வெளியிட்ட "கலைக் களஞ்சியம்" வால்யூம்கள் வைத்திருப்பவர்கள் அன்புகூர்ந்து தெரிவிக்க வேண்டுகிறேன். நியாயமான விலைகொடுத்து வாங்கிக் கொள்கிறேன்.

*– ரா. கி. ரங்கராஜன்,*
*35, ராமானுஜ நகர்,*
*சென்னை – 600 023.*

●● ஆடவர், மகளிர், மற்றும் ஏழை மாணவ மாணவியருக்குக் குறைந்த கட்டணத்தில் தையல் வகுப்புகள் நடத்துவதை ஒரு சேவையாகக் கடந்த எட்டு ஆண்டுகளாகச் செய்து வருகிறேன். விருப்பமுள்ளவர்கள் சேர்ந்து பயனடையலாம்.

*– கல்பனா மணியன்,*
*183, 12 வது பிரதான சாலை,*
*லக்ஷ்மிநகர்,*
*போரூர்,*
*சென்னை – 600 116.*

●● இந்த நூற்றாண்டின் தொடக்க காலத்தில் வாழ்ந்த ஸ்ரீ ஆட்கொண்ட வல்லி கோவிந்தாசாரியார் எழுதிய "கீதாபாஷ்யம்" ஆங்கில உரை மறுபதிப்புக்குத் தேவைப்படுகிறது. தகுந்த சன்மானம் உண்டு.

*– டி. தோதாத்ரி,*
***ARCHISH PUBLICATIONS***
***MS/RB 11/10/11, Railway Qrts.,***
***G.T.B. Nagar,***
***Bombay - 400 037.***

●● அஷ்டாவதானம் அருங்கலை பற்றி அறியவும் கற்றுக் கொள்ளவும் ஆவல். கலையில் தேர்ச்சி பெற்றோர் எனக்கு கற்பிக்க வேண்டுகிறேன்.

*– வி. அருள்தேவ்,*
*14, இரண்டாவது குறுக்குத் தெரு,*
*சிதம்பரா எக்ஸ்டென்ஷன்,*
*சென்னை - 600 018.*

●● ஆனந்த விகடன் 1940 தீபாவளி மலரில் அமரர் கல்கி எழுதிய "பால ஜோசியர்" என்ற சிறுகதை பிரசுரமானது. புத்தகத் தொகுப்பில் சேர்க்க தேவைப்படுகிறது. மேற்படி மலரையோ அல்லது அந்தக் கதையின் ஜெராக்ஸ் பிரதியை மட்டுமோ அனுப்பி வைத்தால் உதவியாக இருக்கும். தக்க சன்மானம் உண்டு.

*– சீதாலக்ஷ்மி பதிப்பகம்,*
*1, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம்,*
*சென்னை – 600 034.*

●● ஓய்வு நேரத்தில் போட்டோ பிலிம், சினிமா பிலிம், எக்ஸ்ரே பிலிம் கழுவிய நீரிலிருந்து வெள்ளி எடுக்க தபால் மூலம் பயிற்சி தருகிறேன். விவரங்களுக்கு எழுதவும்.

*– கனகலட்சுமி,*
*25, வள்ளுவர் தெரு,*
*வெங்கமேடு,*
*கரூர் – 639 006.*

*(பாலம் மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி – தோல்விகளுக்கு கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்க இயலாது. – ஆர்.)*

# KALKI SHOPPING PAGE

# KALKI SHOPPING PAGE

## அதிவேக வேத இயற்கை மருத்துவம்

1. நாட்பட்ட நோயை உடனே குணமாக்குவது.
2. ஆயுள் பூராவும் மருந்து சாப்பிடும் பழக்கத்தை நிறுத்துவது.
3. சுகமான நோய் திரும்ப வராமல் செய்வது.
4. டாக்டர்களால் கைவிடப்பட்ட நோயை குணப்படுத்துவது.
5. நோயாளிகளை உடனே திருப்திபடுத்தி அனுப்புவது.
6. முடிந்தவரை ஆப்பரேஷன் செய்வதை தவிர்த்தல் ஆகியவை.

விலாசம் :

நெ. 16/1, அம்பார்சன் தெரு,
குறளகம் எதிரில் உள்ள
சரவண பவன் A/C உள்ள தெரு
வாரந்தோறும் வியாழன், வெள்ளி,
சனி – காலை 10.00 மணி.
ஆங்கில மாதம் முதல் வாரத்தில்
திங்கள், செவ்வாய், புதன்.

பிறப்பும் - இறப்பும் படைத்தவன் பொறுப்பில், இடையில் வந்த நோயை தீர்ப்பது இயற்கை மருத்துவம் ஆகும்.

## மணமக்கள் தேவை இலவச சேவை

அனைத்து சமூகத்திலும், ஆயிரக்கணக்கான வரன்கள் பெற உடன் பதிவுசெய்ய தொடர்பு கொள்ளவும்.



**BEST BRIDE & GROOM BANK™**

H.O.: 3rd Floor, Shanthi Complex,
26, Ranganathan Street,
Madras - 600 017.
Phone : 4348560 4347025

B.O.: 13, College Road,
Nanganallur, Madras - 114.
7, Station Road, Tambaram
Sanatorium,
Madras - 600 047.
5, Second Main Road,
New Colony,
Chromepet,
Madras - 600 044.

Working on Sundays also

## கண்ணாளன்

GROUP OF COMPANIES

வருமானத்தின் அதிக பங்கினை வாடிக்கையாளர்களுக்கு வட்டியாக வழங்குகிறோம்.

21% வட்டி + 3% ஊக்கத் தொகை = 24%

(முதன் முறையாக பெனிஃபிட் ஃபண்டு சரித்திரத்தில்)

ரூ.25,000/- முதல் ரூ.5,00,000 வரை

சீட்டு குருப்கள் - எல்லா தரப்பினருக்கும் ஏற்ற வகையில்

**KANNAALAN**

**KANNAALAN BENEFIT FUND LTD.**

☆ CHITS ☆ FINANCE ☆ TRADE CREDITS ☆ CONSTRUCTIONS

Regd Office:- 17/A, Woods Road, 1st Floor, Royapettah Clock Towers, Madras-600002.
Ph : 8555488 / 8552973 / 8547764
Branch : 140/1C, 2nd Floor, Bells Road, Behind Chepauk Stadium, Madras - 600 005.

*Worth your Trust – Truly!*

## நீங்கள் கேட்டவை – தராசு

● ஆர். முருகானந்தம், எஸ். மாரியூர்.

? மத்தியில் ஆட்சி அமைக்க பி.ஜே.பி.க்குத் தனி மெஜாரிட்டி கிடைக்கவில்லையென்றால், ஜெயலலிதா உறுதியாக ஆதரவு கொடுப்பார் என்று வாஜ்பாயி கூறியுள்ளது குறித்து...?

! வாஜ்பாயி எப்போதுமே நகைச்சுவையாகப் பேசுபவர். 'ஜெ'க்கு எவ்வளவு நாடாளுமன்ற சீட்டுகள் கிடைக்கும் என்பது அவருக்குத் தெரியாதா என்ன...!

● என். சண்முகம், திருவண்ணாமலை.

? சு. சுவாமி, எம்.எஸ். உதயமூர்த்தி போன்றவர்கள் தேர்தலில் வெற்றி பெறுவது ஜனநாயகத்துக்கு நல்லது என்கிறேன் நான்... ஏற்றுக் கொள்கிறீர்களா...?



● சிரிக்கச் சிரிக்க...



● யார்...

● பூஜ்யம்...?



# தேர்தலுக்குப் பிறகு 'ஜெ' என்ன செய்வார்?

! இதற்காகத்தான் மேல்சபை வேண்டும் என்பது. எம்.ஜி.ஆர். அநியாயத்துக்கு ஒழித்த அதனை மு.க. திரும்பக் கொணரலாம்.

● வி. சத்தியப்ரியன், சென்னை – 15.

? 'எந்த நடிகரின் பிரசாரமும் தேவையில்லை... எந்த நடிகரையும் எங்கள் கட்சியில் சேர்க்க மாட்டோம்...'' என பாட்டாளி மக்கள் கட்சித் தலைவர் ராமதாஸ் கூறியுள்ளாரே...?

! பாவம்! விரக்தியில் பேசுகிறார்... மன்சூர் அலிகான் தந்த ஏமாற்றம் ஒருபுறம்; எதிரணியான தி.மு.க. – த.மா.கா. கூட்டணிக்கு ரஜினி தரும் பேராதரவு மறுபுறம்...!

● என். செல்வராஜ், சென்னிமலை.

? இம்ரான்கானின் மருத்துவமனையில் ஏற்பட்ட குண்டு வெடிப்பு குறித்து...?

! கவனித்தீர்களா...? இம்ரான்கான் தாமே தம் மருத்துவமனைக்கு குண்டு வைக்க ஏற்பாடு செய்து பாக். அரசுக்கு அபகீர்த்தி தேடித் தர முயன்றிருக்கிறார் என்பதாக ஒரு குற்றச்சாட்டு எழுந்தது... ஒருவேளை பேநசீர் 'ஜெ'யிடம் யோசனை கேட்டிருப்பாரோ...?

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை.

? தேர்தலில் நரசிம்மராவ் காங்கிரஸ் தோற்றால் தி.மு.க.வினர் ஓட ஓட அடிப்பார்கள் என்று அன்பரசு கூறியுள்ளாரே...?

! இரண்டு பேரைப் பிரசார வேனின் 'மேடை'யிலேயே பிரபுதேவா ஸ்டைலில் ஆடவிட்டு வோட்டுக் கேட்கும் அன்பரசுவின் பிரசார பாணியே அசிங்கம்! இதைக் காணச் சகியாமல் சில கிராம மக்கள் விரட்டியடித்து விட்டார்கள் என்று நேரில் பார்த்த ஒரு நிருபர் தெரிவித்தார்!

● மல்லிகை மன்னன், முடக்காத்தான்.

? 'காங்கிரஸ் கட்சியின் பின்னணியும் நேரு குடும்பத்தின் தொடர்பும் இல்லாது போனால், மூப்பனார் வெறும் பூஜ்யம்!' என்று புரட்சித் தலைவி கடுமையாகச் சாடியிருக்கிறாரே...?

! காங்கிரஸ் பின்னணியிலிருந்து பிரிந்து வந்த பிறகும் தனிச் சின்னம் பெற்று, மூப்பனார் அரசியலில் தமக்கென ஒரு நிலையான இடத்தைப் பிடிக்க முடிந்திருக்கிறது. ஆனால் ஜெயலலிதா தான் இரட்டை இலை என்னும் பிரம்மாஸ்திரம் இருந்தும் எம்.ஜி.ஆர். பின்னணி என்னும் பலம் இருந்தும் இந்தத் தேர்தலில் அவருக்கு வரலாறு காணாத எதிர்ப்பு! இப்போது சொல்லுங்கள் – யார் பூஜ்யம்?!

● த. சத்தியநாராயணன், அயன்புரம்.

? ரேவதி வெற்றி பெறுவாரா?

! கொஞ்சமாவது வோட்டுக்களைப் பிரிப்பதில் நிச்சயம் வெற்றி பெறுவார்!

● ந. குணசேகரன், கவுந்தப்பாடி.

? 'ஜெ' ஆட்சியில் என்ன பஞ்சமா பாதகமா நடந்து விட்டது?' என்று காளிமுத்து கேட்கிறாரே...?

! காளிமுத்துவுக்குத் தாம் கட்சி மாறிய கணக்கே தெரியாது என்பதால் நாம் இந்தக் கணக்கைச் சொல்கிறோம் :

1. குடிப்பழக்கத்திற்குக் கள்ளச் சாராயக் கடைகள் திறந்து வைக்கப்பட்டுள்ளன.



* விரக்தி மேலிட...



* அபாண்ட குற்றச்சாட்டு!



* அசிங்க பிரசாரம்!



* ஏன் இந்த வேலை?

2. பொது மக்களின் பணம் திருடப்பட்டுக் கொண்டிருக்கிறது 3. கொலை இல்லாவிட்டாலும் கொலை முயற்சிகள் நடந்துள்ளன. 4. குரு நிந்தனையை விடவும் மோசமானதான நீதி மன்ற ஆணைப் புறக்கணிப்புகள், மீறல்கள் நடந்துள்ளன. 5. இவையெல்லாம் எங்கள் ஆட்சியில் நடக்கவேயில்லை என்று ஏராளமான பொய்கள் வேறு சொல்லப்பட்டுள்ளன.

● எம். ரேவதி, மதுரை – 7. ☐

? வரும் தேர்தலில் தி.மு.க. – காங்கிரஸ் கூட்டணி வெற்றி பெறும் என கருத்துக் கணிப்புகள் கூறுகின்றன. அதன் பிறகு அமையும் ஆட்சியிலும் ஊழல்கள், தவறுகள் நடந்தால் மூப்பனார் தட்டிக் கேட்பாரா?

! கம்பம் ஆர். அஜிதாவின் கேள்வி உங்களுக்குப் பதிலாக அமைந்துள்ளது.

● ஆர். அஜிதா, கம்பம். ☐

? 'கருணாநிதி ஆட்சியில் அமர்ந்த பின்பு தவறு செய்தால் சட்டையைப் பிடித்துக் கேட்பேன்' என்று மூப்பனார் பேசியிருப்பது பற்றி...?

! தி.மு.க. – சுவதந்திரா கட்சி கூட்டணி வென்ற சில மாதங்களில், தி.மு.க. போக்கு சில விஷயங்களில் பிடிக்காமல் போக, "தேன்நிலவு முடிந்து விட்டது!" என்று ராஜாஜி கூறினார். உடனே அண்ணா அவர்கள், "தேன்நிலவு முடிந்து விட்டது; குடும்ப வாழ்க்கை ஆரம்பமாகியிருக்கிறது... சில சச்சரவுகள் இருப்பது இயல்புதான்; ஆனால் அது விவாகரத்தில் போய் முடியாது!" என்று சொன்னது நினைவுக்கு வருகிறது.

● தே.மு. கருணாநிதி, தேவராயனேரி.

? 'இந்தத் தேர்தல் எனக்கும் கருணாநிதிக்கும் நடக்கும் கடைசி யுத்தம்' என்று 'ஜெ' கூறுகிறாரே?

! ஒரு பொதுத் தேர்தலை, தனிமனித யுத்தமாகச் சித்திரிப்பதென்பது ஜனநாயகத்தையே கேவலப்படுத்துகிற விஷயம்.

● செய்யது மைதீன், மேலப்பாளையம்.

? ரேவதி சரி... ஆச்சிக்கு ஏன் இந்த வேலை...?

! அம்முவின் வற்புறுத்தலாக இருக்கும்!

● ெ. மனோகரன், நெற்குப்பை.

? ப. சிதம்பரம் பற்றி தற்போதைய தங்கள் கருத்து...?

! பிரசார யுக்திகளிலும் மக்களுடன் கலந்து பழகுவதிலும் பேச்சில் கண்ணியம் காப்பதிலும் நெ.1! லேட்டஸ்டாக, கர்ப்பிணிப் பெண்ணுடன் பஸ் காத்திருக்க, அவரது தேர்தல் கூட்டம் வழி மறைக்க, செய்தி அறிந்து மன்னிப்புக் கேட்டு, உடனே வழி செய்து கொடுத்துள்ளார்.

● புளியரை கணேசன், சென்னை – 30.

? போகிற போக்கைப் பார்த்தால் ராஜீவ் கொலைக்கு சோனியாதான் காரணம் என்று அறிக்கை விடுவார்கள் போலிருக்கிறதே?

! போகிற போக்கைப் பார்த்து, பிரபாகரன் மனத்துக்குள் சிரித்துக் கொண்டிருப்பார்!

● சீதாமகன், மதுரை – 116.

? இவ்வளவு நாட்களாக இல்லாமல் இப்போது 'ஜெ', மூப்பனார் மீது கொலைப் பழி போடுகிறாரே...?

! அபத்தமான, அபாண்டமான பழிசுமத்தல். தப்பித் தவறி கிடைக்கக்கூடிய சில ஓட்டுகளுக்கும் ஆபத்தைத் தேடிக் கொண்டிருக்கிறார்!

● பி. சரவணன், சென்னை – 15.

? கலைஞருக்குத் திரையுலகு நடத்திய பாராட்டு விழாவில் நடிகர் திலகம் ஏன் கலந்து கொள்ளவில்லை?

! வேறென்ன...? சம்பந்திக்குக் கோபம் வந்து விடுமோ என்ற பயம்தான்!

● ஜெ. சந்திரசேகரன், திருச்சி – 20.

? தேர்தல் விதிமுறைகளை மீறும் 'ஜெ' வை தேர்தல் கமிஷன் கண்டுகொள்ளாமல் இருக்கிறதே?

! கவலைப்படாதீர்கள்... மக்களும் அவர் கட்சியைக் கண்டுகொள்ளாமல் விட்டு விடுவார்கள்!

● கலை அரசு, கோவை.

? தேர்தலுக்குப் பின் ஜெயலலிதாவின் திட்டம் எதுவாக இருக்கும்?

! அவருடைய பாஸ்போர்ட்டைப் பறிமுதல் செய்து வைப்பது கூட நல்லதுதான்!

தலா ரூ. 25 பரிசு பெறுவோர் : ☐
என். ரேவதி
144 ஜி, சிங்காரவேலர் தெரு,
கே. புதூர், மதுரை – 7.

மற்றும் ரேவதியின் கேள்விக்குப் பதில் அளித்த – ஆர். அஜிதா,
7, பெரியபள்ளிவாசல் தெரு,கம்பம் – 625 516.



# ஸ்ரீ கந்தசுவாமி

## பர்மனென்ட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1990

பதிவு அலுவலகம்: 60, சாமி பண்டாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2. ph: 848917

கிளை அலுவலகம்: 36, ஜீனிஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை-600 015. போன்: 459569




### பிக்சட் டிபாசிட்

| 46நாள் | 3மாதம் | 6மாதம் | ஆண்டு | 2ஆண்டு | 3ஆண்டு | 4ஆண்டு | 5ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

**21%**

5 வருடங்கள்
ரூ.50,000/-
அதற்கு மேலும்

### PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ. [illegible] | 60 மாதம் | ரூ. 70,000 |

### சொத்துக்கள் மீது கடன்

- ❑ வீடு / ஃப்ளாட் பேரில் கடன் வழங்கப்படும்.
- ❑ மாத வட்டி ரூ.1.85 மட்டுமே
- ❑ விரைந்த சேவை.
- ❑ சென்னை மாநகராட்சி எல்லைக்குள் இருக்க வேண்டும்.



### நகைக்கடன்

- ❑ குறைந்த வட்டிக்கு கிடைக்கும்
- ❑ 10 கிராமுக்கு ரூ.3000 வழங்கப்படும்.
- ❑ R.D. கட்டத் தேவையில்லை
- ❑ எந்த சார்ஜும் வசூலிப்பதில்லை



**பாதுகாப்புப் பெட்டக வசதியும் உண்டு.**

## பென்ஷனர் நலத்திட்டம்

**20% P.a** ரூபாய் 10 ஆயிரமும் அதற்கு மேலும் காலம் 1 ஆண்டு வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.



சேர்மன்:
**P. பாலசுப்பிரமணியம்,** B.Sc.,
முதன்மை அறங்காவலர்,
கந்தகோட்டம்,
சென்னை-600 003.
நிர்வாக இயக்குனர்:
பார்க் டவுன் பெனிபிட்
பண்டு லிட்.

இயக்குநர்கள் குழு
R.விவேகானந்தன் B.Com.,
(Chairman : Park Town Benefit Fund Ltd.)
A.சுப்பிரமணியன்
V.சண்முகவடிவு B.A.,
V.விஜயகோபால் B.Com., D.C.P.
M.ராஜேந்திரன்
P.ஏகாம்பரம்

பங்குதாரர்களுக்கு மட்டும்

H.O. Friday Holiday (It is a P.B. Group Concern) B.O. Tuesday Holiday



# எய்ட்ஸ் போலவே பரவும் இன்னொரு பயங்கரம்!

**எய்ட்ஸ் வைரஸ் பரவும் முறைகளிலெல்லாம் பரவக்கூடிய இன்னொரு கொடிய கிருமி ஹெபடைடிஸ்-பி. இந்த நோய்க் கிருமித் தாக்குதல் பற்றி, அண்மையில் வேலூர் சி.எம்.சி. மருத்துவமனையில் ஒரு கருத்தரங்கு நடைபெற்றது. அதில் பங்குகொண்ட சென்னை டாக்டர் உஷா சீனிவாஸ் அவர்களிடம் விவரங்கள் கேட்டோம் :**

"வைட்டமினில்தான் ஏ,பி,சி என்று இருக்கிறது... வைரஸ் கிருமியில் கூடவா டாக்டர்...?"

"இப்போது ஹெபடைடிஸ் A யிலிருந்து தொடங்கி G வரை உள்ளன. A மற்றும் E வகை ஹெபடைடிஸ், குடிநீர், உணவு வழியாகப் பரவுகின்றன. B,C மற்றும் D இரத்தம் வழியாக, அல்லது ரத்தம் சார்ந்த பாதிப்புகளிலிருந்து வருகிறது."

"இரத்தம் சார்ந்த பாதிப்பு என்றால்?"

"பாதிக்கப்பட்டவரின் இரத்தத்தில் உள்ள கிருமி, அவரது தோலில் உள்ள வெட்டுக்காயம், வெடிப்பு அல்லது புண்ணிலிருந்து வெளிப்படும் ரத்தம் மூலமாக அடுத்தவருக்குப் பரவுவது. ஹெபடைடிஸ்-பி தாக்கிய ஒருவருக்கு, அறுவைச் சிகிச்சை செய்ய நேர்ந்தால், அதைச் செய்யும் மருத்துவருக்குக் கூட அது தொற்றிக் கொள்ளும் அபாயம் இருக்கிறது. பாதிக்கப்பட்டவரின் ரத்தம் வேறு ஒருவருக்கு ரத்த தானமாகப் போய்ச் சேரும்போதும் ஹெபடைடிஸ்-பி வைரஸ் பரவுகிறது. உடல் உறவு மூலமாகவும் பரவுகிறது. பாதிக்கப்பட்ட தாய் பிரசவிக்கும் போது, குழந்தைக்கும் பரவுகிறது. ஸ்டெரிலைஸ் செய்யாத ஊசியைப் பல பேருக்குப் போடுகிறபோதும் இக் கிருமிகள் பரவுகின்றன. கிட்டத்தட்ட எய்ட்ஸ் கிருமி பரவும் அத்தனை முறைகளிலும் இந்த ஹெபடைடிஸ்-பி கிருமி பரவுகிறது."

"யார் யாருக்கு இந்த பி வைரஸ் தாக்குதல் வரும் சாத்தியக் கூறுகள் அதிகம்?"

"மருத்துவர்கள், சர்ஜன்களுக்கு, செவிலியருக்கு... டயாலிசிஸ் செய்ய உதவும் உதவியாளர்களுக்கு... ரத்த வங்கியில் வேலை பார்க்கிறவர்களுக்கு, லாப் டெக்னீஷியன்களுக்கு இவர்களுக்கெல்லாம் இம்யுனைசேஷன் செய்ய வேண்டும் - அதாவது தடுப்பூசி போட வேண்டும். இது மிகவும் முக்கியம்."

"எப்படிப்பட்ட தடுப்பூசி?"

"வாக்ஸின்தான். இரத்தத்திலுள்ள பிளாஸ்மாவிலிருந்து எடுத்த வாக்ஸினும் இருக்கிறது. ஜெனடிக்கான முறையில் எடுக்கப்படும் வாக்ஸினும் இருக்கிறது. முதலில் ஓர் ஊசி. பிறகு ஒரு மாதம் கழித்து இன்னொரு ஊசி. அப்புறம் மேலும் 6 மாதம் கழித்து மற்றொரு ஊசி. ஐந்து வருடங்கள் கழித்து பூஸ்டர் ஊசி ஒன்று போட்டுக் கொள்ள வேண்டும். இது மிக மிக அவசியம்."



• உஷா சீனிவாஸ்

"குடும்பத்தில் ஒருவருக்கு இருந்தால், மற்ற எல்லாருமே தடுப்பூசி போட்டுக் கொள்ள வேண்டுமா?"

"ஆமாம். இல்லாவிட்டால் தொற்றிக் கொண்டு பரவும் வாய்ப்பு இருக்கிறது."

"இந்த நோய்க் கிருமி தாக்கியதன் அறிகுறி என்ன?"

"ஜான்டிஸ் எனப்படும் மஞ்சள் காமாலைதான் அறிகுறி. சிலருக்கு காமாலை இல்லாமலே கூட கிருமி இருக்கலாம். ஜான்டிஸ் வருபவர்களுக்கெல்லாம் ஹெபடைடிஸ்-பி கிருமித் தொற்று இருக்கும் என்று முடிவு செய்துவிடக் கூடாது. ஹெபடைடிஸ் ஏ கிருமியாகவும் அது இருக்கலாம். 'ஏ' கிருமி 'பி' அளவுக்குக் கொடியது

அல்ல. மஞ்சள் காமாலை வந்தால் கட்டாயமாக டாக்டரிடம் காட்டி ரத்தப் பரிசோதனை செய்து, என்ன வகைக் கிருமி என்று உறுதிப்படுத்த வேண்டும். பலர் வெறும் கை வைத்தியம் செய்து கொண்டு டாக்டரிடம் போகாமலே இருந்து விடுகிறார்கள். இது மிகவும் அபாயகரமானது. ஹெபடைடிஸ் 'பி' இருந்தால் ஆபத்தான 'கோமா' நிலைகூட ஏற்படலாம். ஆனால் ஆறு வாரத்துக்குள் சரியாக்கி விடலாம். 5-10 சதவிகிதப் பேர்களுக்கு ஈரலில் தொடர்ந்து கிருமித் தொற்று இருந்து கடுமையாகி (கிரானிக்) அதுவே இன்ஃபெக்ஷனாக மாறலாம். இந்த வைரஸ் தொடர்ந்து ஈரலில் இருந்தால், மகோதரம் மற்றும் புற்று நோய் (ஹெப்டோமா) வரலாம்."

"இதற்குச் சிகிச்சை என்ன?"

"மஞ்சள் காமாலைக்கு ஆறு வாரத்துக்கு முழு ஓய்வு தேவை; க்ளூகோஸ் கொடுக்கலாம். கீழாநெல்லி, கரிசிலாங்கண்ணி இவை மருந்துகளாகப் பயன்படுகின்றன. நாட்பட்ட, கடுமையான தாக்குதல் இருக்கும்பட்சத்தில், எதிர்ப்புச் சக்தி கூட்டுவதற்கு இன்டர்ஃப்ரான் முதலிய வைரஸ்-எதிர்ப்பு மருந்துகள் உட்கொள்ளலாம்."

"ஹெபடைடிஸ்-பி வைரஸ் தாக்குதலிலிருந்து தப்பிக்க என்னென்ன வழி முறைகள் இருக்கின்றன?"

"டிஸ்போஸபிள் சிரிஞ்சுகளையே உபயோகிக்க வேண்டும். சுகாதார ஊழியர்கள், செவிலியர்கள் கையுறை அணிய வேண்டும். தடுப்பூசி போட்டுக் கொள்ள வேண்டும். ரத்தப் பரிசோதனை செய்ய வேண்டும். திருமண பந்தத்துக்கு வெளியே உடலுறவு வைத்துக் கொள்ளாமல் இருக்க வேண்டும். இது பற்றிய பிரசாரம் மேற்கொள்ளப்பட வேண்டும். இதற்காகத்தான் வேலூரில் மாநாடு கூட்டப்பட்டு, ஒன்பதாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 'மாஸ் வாக்சினேஷன்' திட்டத்துக்குப் போதுமான நிதிவசதி செய்து கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறது. குழந்தைகளுக்குத் தடுப்பூசி போடும் திட்டத்தையும் இங்கே சிபாரிசு செய்திருக்கிறார்கள்."

"ஹெபடைடிஸ்-பி வைரஸ் தாக்குதலுக்கு எத்தனை பேர் உட்படுகிறார்கள், டாக்டர்?"

"சுமார் 8 முதல் 10 சதவிகிதம் பேர். சிலருக்கு மஞ்சள் காமாலை அறிகுறி கூட இருக்காது; ஆனால் இந்தக் கிருமித் தொற்று இருக்கும்! வெளிநாடுகளில் படிக்கவோ வேலைக்கோ செல்லும் முன் மருத்துவப் பரிசோதனைக்குட்படும் சில இளைஞர்களிடம் இத்தொற்று இருப்பது கண்டுபிடிக்கப்பட்டு வாய்ப்பு இழந்திருக்கிறார்கள்!"

பேட்டி : **சாருகேசி**





# இன்டர்நெட்டில் ரஜினி!

இன்டர்நெட் நினைவிருக்குமே! உலகின் லட்சக்கணக்கான கம்ப்யூட்டர்களை இணைத்துத் தகவல் பரிமாறிக் கொள்ள ஏற்படுத்தப்பட்ட வலைப்பின்னல்.

பொழுது போகாமல் கம்ப்யூட்டருக்கு முன்னால் உட்கார்ந்து, இன்டர்நெட்டின் தகவல் வீதியில் திரிந்து கொண்டிருந்த பொழுது, "ரஜினி" என்ற மந்திரச் சொல் கண்ணில் பட்டது.

ஆர்வத்தோடு மேற்கொண்டு துருவ, "சூப்பர் ஸ்டாரு யாருன்னு கேட்டா, சின்னக் குழந்தையும் சொல்லும்" என்ற எழுத்துக்களும், "பாட்சா" ரஜினி படமுமாக நம் கம்ப்யூட்டர் திரை நிறைந்தது. தொடர்ந்து, ரஜினி... ரஜினி... ரஜினி...

பழைய பெங்களூர் பஸ்ஸில் ஆரம்பித்து, நேற்றைய அமெரிக்க அறிக்கை வரையான ரஜினி வரலாறு... "அபூர்வ ராகங்களில்" தொடங்கி, "முத்து"வில் முடிகிற ரஜினி படப் பட்டியல். ஏற்ற பாத்திரங்களின் விவரம்... சொல்லிப் பிரபலமாக்கிய வசனங்கள் ("ஜுஜுபி") போனஸாக, நம் கம்ப்யூட்டரில் இறக்கி அச்சடித்துக் கொள்ள வசதியாக ரஜினியின் புகைப்படமும்!

அமெரிக்காவில் கம்ப்யூட்டர் பயிலும் தமிழ் இளைஞர் ஒருவரின் கைவண்ணம் இது. கமல் ரசிகையான சகோதரியைச் சீண்ட இப்படி ஆரம்பித்தாராம்!

சீக்கிரமே இன்டர்நெட் ரஜினி, "நான் ஒரு தடவை சொன்னா, நூறு தடவை சொன்னது போல" என்று வசனம் உதிர்ப்பார் என்று எதிர்பார்க்கலாம். உலகம் முழுவதும் கம்ப்யூட்டர் திரைகளில் இறக்கை கட்டிப் பறக்கப் போகிறது அண்ணாமலை சைக்கிள்!

- **அச்வின்**

# வீடியோவில் வீரப்பன்!

புதிய அமைச்சரவை உருவாகி முதல் கூட்டத்திலேயே அந்த அதிமுக்கியமான பிரச்னை அலசப்பட்டது : சந்தனக் கடத்தல் வீரப்பனின் டீவி பேட்டி காரணமாக தமிழக போலீஸின் "இமேஜ்" மிகவும் தாழ்ந்து போயிருக்கிறது. அதை மறுபடி உயர்த்துவதற்கு வழி என்ன?

"வேறென்ன? வீரப்பனை வளைத்துப் பிடித்து, சிறையில் தள்ளி, வழக்குப் போட்டு, தண்டனை பெற்றுத் தருவதுதான் வழி" என்று அனுபவஸ்தரான ஒரு மூத்த அமைச்சர் கூறவும் முதல்வர் முறைத்தார்.

"அது யாருக்குத்தான் தெரியாது? ஆனால் அவனைப் பிடிப்பதுதான் வானத்தை வில்லாக வளைக்கிற காரியமாயிற்றே? சுலப சாத்தியமா ஏதாவது யோசனை சொல்வீங்கன்னு பார்த்தா..."

அமைச்சர்கள் எல்லோரும் உச்சந்தலை சொறிந்து கசிக்க, ஏற்கெனவே வீடியோ அனுபவமுள்ள ஒரு குட்டி அமைச்சர், தொண்டை செருமி முதல்வர் கவனத்தைக் கவர, "என்ன, சொல்லு!" என்று அனுமதி கிடைத்தது.

"விஷயம் ரொம்ப சிம்பிள். வீரப்பன் டீவி பேட்டிக்குப் போட்டியா இன்னொரு டீவி பேட்டி தயாரிக்கணும். வீரப்பனைப் பிடிப்பதில் தன் கையாலாகாத்தனத்தை நன்றாக நிரூபித்துள்ள உயர் போலீஸ் அதிகாரியைக் கதாநாயகனாக்கி, அவர் இதுவரை எடுத்துக் கொண்ட முயற்சிகள், பட்ட கஷ்ட நஷ்டங்கள் எல்லாவற்றையும் கதை கதையாகச் சொல்லச் செய்து படமாக்கலாம். தமிழக அரசு இதில் நேரடியாக ஈடுபடாமல் பின்னணியில் இருந்து கொண்டே ரபிபெர்னார்ட் போன்றவரிடம் ஒப்படைத்து, ஸ்பான்ஸர் பிடித்து, ஏதேனும் ஒரு ஸாடிலைட் டீவி மூலம் பண்ணி





# அருள்வாக்கு

த்வேஷமும் ஆசையும் நமக்கு அந்யமாக, நம்மை விட வேறாக, இரண்டாவதாக இருக்கும் வஸ்துக்களிடத்தில்தான் உண்டாகின்றன. நம்மிடத்திலேயே நமக்கு ஆசையும் உண்டாவதில்லை; வெறுப்பும் உண்டாவதில்லை. ஆனபடியால் இப்போது வேறேயாக உள்ள பொருள்களிடத்தில் ஆசை உண்டாவதால், அவைகளையும் நாமாகவே பண்ணிவிட்டால் ஆசை உண்டாகாது அல்லவா? நம்மிலும் வேறாக ஒன்று இல்லாமல் எல்லாவற்றையும் நாமாகப் பண்ணினால் ஆசை உண்டாகாது. ஆசை இல்லாவிட்டால் கெட்ட ப்ரயத்னம் இல்லை. அதனால் பாபம் இல்லை. பாபம் இல்லாதபொழுது தேகம் இல்லை. அது இல்லாவிட்டால் துக்கம் இல்லை. வாழ்நாள் பூராவும் நாம் பல பிரயத்னங்கள் பண்ணியும் சாச்வதமாகப் போக்கிக் கொள்ள முடியாத துக்கமானது, இப்படி நமக்கு வேறாக இரண்டாவது வஸ்து இல்லை என்று ஆக்கிக்

ரண்டு எபிஸோட் தொடர்ந்து ஒளிபரப்பத் தூண்டலாம்."

"சபாஷ், சரியான பேட்டி!" என்று திட்டத்தை அங்கீகரித்தார் முதல்வர். "தேவாரத்தை டீவில பார்க்கிற ஜனங்கள் அப்புறம் வீரப்பனை மறந்தே போயிடுவாங்க!"

இந்த முக்கிய விஷயத்தை முடிவு செய்த கையோடு அன்றைய அமைச்சரவைக் கூட்டம் முற்றுப் பெற்றது.

போலீஸ்காரர்களுக்கு 'தொப்பிகள் தயாரித்துத் தரும் நிறுவனம் ஒன்று பன்னிரண்டு நிகழ்ச்சிகளையும் ஸ்பான்ஸர் செய்ய முன் வரவே, மிகுந்த உற்சாகத்துடன் தேவாரத்தை அணுகினார் ரபிபெர்னார்ட். "வீரப்பனைப் போலவே, அடிக்கடி நீங்க மீசையை நீவி விடப் பழகணும். இதான் ரொம்ப முக்கியம். அவன் இரண்டு வடம் காட்டினான்; நீங்க மூணு வடம் காட்டினால் ரொம்ப நல்லது. நாளைக்கு லொகேஷன் கிளம்பறோம்."

"ஐயோ! வீரப்பன் இருக்கும் இடத்துக்கே போகணுமா?" என்று கண்களில் கவலை தேக்கி தேவாரம் கேட்க, "சேச்சே! அவ்வளவெல்லாம் செலவு எதுக்கு? இங்க, பறங்கிமலை பக்கத்துலயே மலையடிவாரம், பாறைகள், புதர்கள் என்று அகப்படாமலா போகும்" என்று அபயமளித்தார் ரபி.

தேவாரம் ஒரு போலீஸ் ஜீப்பிலும் வீடியோ குழு வேனிலும் புறப்பட்டுச் சென்றனர். காமிரா ஆங்கிள் செட் அப் செய்த ரபி, "மிஸ்டர் தேவாரம்! நான் கேள்வி கேட்பேன், நீங்க நீள நீளமா பதில் சொல்லணும். நடிச்சுக் காட்டிக்கிட்டே பேசணும். எப்படி வேணும்னாலும் தோணினபடியெல்லாம் ஆக்ஷன் காட்டலாம். எகிறலாம், குதிக்கலாம், புரளலாம், ஏ.கே.47-ல் குறிபார்க்கலாம். ஆனா தப்பித் தவறி கட்டு மட்டும் தொலைச்சுடாதீங்க!" என்றார்.

தேவாரம் உற்சாகமாகத் தலையாட்ட, "கேமரா! மைக்! ஆக்ஷன்!" என்று உத்தரவிட்டுவிட்டு, "மிஸ்டர் தேவாரம்! நீங்க முதல் முதலா வீரப்பனைப் பிடிக்கப் போகும் போது என்ன நடந்துச்சு, சொல்ல முடியுமா?" என்று ரபி கேட்கவும், தேவாரம் அருகில் நிறுத்தியிருந்த ஜீப்பில் தாவி ஏறினார். "இப்படித்தான் ஒரு துள்ளலோடு புறப்பட்டேன்... நூறு கிலோ மீட்டர் வேகம்... காடு, மரங்கள், புதர்கள்..."

"மரங்கள், புதர்கள், நூறு கிலோ மீட்டர் வேகம்" என்றார் ரபி.

"ஏன் நான் சரியாத்தானே சொன்னேன்? எதுக்கு திருத்தறீங்க?" என்றார் தேவாரம், கோபமாக.

ரபி பெர்னார்ட் நெற்றியை உள்ளங்கையால் அடித்துக் கொண்டு அழாத குறையாக, "உங்களைத் திருத்தலே, உற்சாகப்படுத்தறேன். புரியுதா? உங்க வாக்கியத்தின் கடைசி வார்த்தைகளைத் திருப்பிச் சொல்வேன்; 'ஊங்' கொட்டுவேன்; 'ம்'ன்னுவேன்; நீங்க எதையும் கண்டுக்கக் கூடாது; என்னை ஆமோதித்து தலையாட்டி பேசிக்கிட்டே போங்க!"

"ஓகே! ஓகே!" என்று மறுபடி ஜீப்பில் பாய்ந்து ஏறினார் தேவாரம். மறுபக்கம் ஒரு போலீஸ்காரர் ஜீப்பைச் செலுத்துவது போல் ஸ்டீயரிங் ஆட்டினார். வீடியோ காமிரா 'விர்'ரென்று இயங்கியது.

"ஜீப் நகரவே இல்லையே" என்று சந்தேகம் தெரிவித்தார் தேவாரம்.

"அதெல்லாம் அப்புறம் கம்ப்யூட்டர் கிராஃபிக்ஸில் பேக் டிராப் போட்டு, மிக்ஸ் பண்ணி சமாளிப்போம். இப்ப நீங்க ஜீப்பிலிருந்து குதிச்சு, புரண்டு எழுந்து, ஒரு பாறைக்குப் பின்னால் உடலை மறைத்துக் கொண்டு ஏ.கே. 47 நீட்டி குறி பாருங்க!"

"ஏற்கெனவே ஒரு விபத்தில் எனக்குக் கால் முறிவு ஏற்பட்டு ஆஸ்பத்திரியில் இருந்தது உனக்குத் தெரியும்தானே!" என்று பரிதாபமாகக் கேட்டார் தேவாரம்.

"சரி சரி, அதுக்கு ஒரு டூப் போட்டு எடுத்

கொள்வதனால் தான் கைகூடுகிறது. இப்படி "இரண்டு இல்லை" என்பதுதான் அத்வைதம்.

இரண்டாவது ஒன்று இருந்தால், அது நம்மை விடச் சக்தி உள்ளதாக இருந்தால், பயம் உண்டாகிறது. அழகாக இருந்தால் ஆசை உண்டாகிறது; சித்தவிகாரம் உண்டாகிறது. இரண்டாவது இல்லாவிட்டால் ஆசை இல்லை; த்வேஷம் இல்லை; பயம் இல்லை. இப்படி இரண்டாவது இல்லாமல் பண்ணுவதுதான் அத்வைதம்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

துக்கறேன். உங்களுக்குக் கால் கட்டு போட்டு ஆஸ்பத்திரி காட்சி எடுத்து சேர்த்தா ஸெண்டிமெண்ட் டச் அள்ளிக்கிட்டுப் போகும்" என்று விட்டுக் கொடுத்த ரபி, "சரி, இந்த மரத்துக்குப் பின்னால் பதுங்கி, எட்டிப் பார்த்து கமெண்டரி கொடுத்தபடியே ஷூட் பண்ணுறதா பாவலா காட்டுங்க" என்றார்.

"ஜீப்லேர்ந்து குதிச்சவன், உருண்டு வந்து, மரத்தின் பின் பதுங்கி, வீரப்பனை எய்ம் பண்ணறேன்" என்று டயலாக் பேசியபடியே தேவாரம் நடிக்க,

"கட் கட்" என்றார் ரபி.

"ஏன்? நல்லாத்தானே பேசினேன்?"

"அதில்லே. ஷாட் சரியா செட்அப் ஆகலே. உங்களுக்கு இந்தப் பக்கம் ஒரு போலீஸ்காரர் நின்னு உங்க டயலாகிலே நம்பிக்கை இல்லாமல் ஏளனமாய் சிரிக்கணும்; அந்தப் பக்கம் இன்னொரு போலீஸ்காரர் நின்னு கொட்டாவி விட்டபடியே வீரப்பன் ஆட்கள் யாராவது நிஜமாகவே வராங்களான்னு தேடணும்."

"எதுக்கு?"

"ஏன்னா, வீரப்பன் பேட்டி அந்த டைப்ல தான் அமைஞ்சிருக்கு. இங்க போலீஸ்காரங்க; அங்க அவனோட அடியாளுங்க..."

அந்தக் காட்சி பதிவாகியதும், "இந்தாங்க" என்று ராஜாஜி எழுதிய மகாபாரதத்தைத் தேவாரம் கையில் திணித்தார் ரபி பெர்னார்ட்.

"என்ன? எதுக்கு இது?"

" 'என்னதான் பொல்லாதவன்னாலும் மனுஷனை மனுஷன் கொல்றது தப்பில்லையா? பாவமில்லையா'ன்னு நான் கேட்பேன். உடனே நீங்க, யானை தண்ணி குடிக்கிறதா நினைச்சு தசரதர் அம்பு விட, ஸ்ரீவகுமாரன் செத்துப் போன கதையை விலாவாரியா எடுத்து விடணும்!"

"அடப்பாவமே! அது பாரதக் கதையில்லையே...! ராமாயணத்துல வரதா ஞாபகம்" என்றார் தேவாரம் சந்தேகத்துடன்.

"சிலப்பதிகாரக் கதையாத்தான் இருக்கட்டுமே, அதனாலென்ன?" என்றார் ரபி. "வீரப்பன் வீடியோல ராஜாஜியின் ராமாயணம் வைச்சிருந்தான்; அதுக்காகவே நீங்க ராஜாஜியின் பாரதம் கைல பிடிக்கணும். கதையின் முடிவில ஒரு தேவாரப் பதிகத்தைப் பாடினா இன்னும் பிரமாதமாயிருக்கும்."

"அது ஒண்ணுதான் பாக்கி!" என்றார் தேவாரம். "இதுக்கெல்லாம் ஈடுகொடுக்கணும்னு தெரிஞ்சிருந்தா இந்தப் போலீஸ் உத்யோகத்துக்கே வந்திருக்க மாட்டேன்" என்று அவர் அலுத்துக் கொள்ள,

அந்தச் சமயம் பார்த்து, கொட்டாவி விட்டபடியே சுற்று வட்டாரத்தை நோட்டம் விட நியமிக்கப்பட்டிருந்த போலீஸ்காரர், கடமையாற்றியவாறே கண்ணயர்ந்து கனவுலகுக்குச் சென்று விட, அங்கு அதிபயங்கர வீரப்பனையும் அவன் கூட்டாளிகளையும் கண்டு மிரண்டு, "ஐயோ வரான்! வீரப்பன் வரான்!" என்று உளறிக் கொட்ட, 'எங்கே? எங்கே?' என்று கூடக் கேட்கத் தோன்றாமல் தேவாரம் பதறிப் போய் ஜீப்பில் ஏற, ரபி பின்தொடர, வீடியோ குழுவினர் வேனில் தஞ்சம் புக, வாகனங்கள் பறந்தன!

தேனாம்பேட்டை தாண்டிய பிறகுதான், 'நாம் வீரப்பன் இருக்கும் காட்டுக்கே போகவில்லை, பறங்கிமலை அடிவாரத்தில்தான் இருந்தோம்' என்பது தேவாரத்துக்கு நினைவு வந்தது.

"நல்லவேளை பிழைத்தோம். ஷூட்டிங்குக்காக வீரப்பன் வளையவரும் காட்டுக்கே போயிருந்தால் நம் கதி என்ன ஆகியிருக்கும்!" என்றார்.

"அதானே! அந்தக் கான்ஸ்டபிள் கனவு கண்டு சரியான சமயத்தில் எச்சரித்தானோ, நம் தலை தப்பியதோ!" என்றார் ரபி.

வெகு சீக்கிரமே ஸாடிலைட் டீவி சானல் ஒன்றில் தேவாரம் ஸ்பெஷல் பேட்டி அவருடைய அபார ஆக்ஷனுடன் ஒளிபரப்பாகியது. அதைத் தனது பிரத்யேக டிஷ் உதவியுடன் டீவியில் பார்த்த வீரப்பன், இத்தகைய மாபெரும் வீரனிடம் சரணடைவது தனது பாக்கியம் என்று கருதி, தனக்குப் பொது மன்னிப்பு சத்தியமாகக் கொடுக்க முடியாது என்று ஜனாதிபதி அடித்துச் சொல்வாரேயானால், தானும் தனது கூட்டாளிகளும் தேவாரத்திடம் சரணடையத் தயார் என்று தமிழக அரசுக்குச் செய்தி அனுப்பியிருப்பதாக லேட்டஸ்ட் தகவல்!

கற்பனை : **செம்பியன்**

# தொண்டன்

தெருத் தெருவாய் நீ சுற்றுகிறாய்
தேர்தல் போஸ்டர் ஒட்டுகிறாய்
கருக்கருவாளைக் கையேந்தி
கட்டளைகேட்டு வெட்டுகிறாய்!

தலைவியின் எடைக்கு எடையாகத்
தங்கம் அளந்து நிதிகொடுத்தாய்
இலவச வேட்டியின் ஏக்கத்திலே
எத்தனை கோவணம் பறிகொடுத்தாய்?

இனக்கலவரமா?... தலைவரவர்
ஏற்பாட்டுக்குச் சொல்லுகிறார்
உனக்கதில் பைசா லாபமில்லை
உத்தரவுக்கே கொல்லுகிறாய்!

அதிரடி அரசியல் நடத்துகிற
அரிதாரத்தில் மயங்கியதால்
புதிராய்ப் போனதுன் பெருமூளை!
புரியலையே இன்னும் நரிமூளை!

ஆயிரம் சின்னங்கள் இருந்தாலும்
அடிமைச்சின்னம் நீயல்லவா?
தேயிலைத்தோட்டம் அவர்வாங்கத்
திண்ணையில் கிழியுமுன் பாயல்லவா?

கொடித்துணியாவது உந்தன்தோல்
கொடிமரமாவது உந்தன்கால்
படிக்கல்லாவது உந்தன்தோள்
பதவிக்கு வந்ததும் நீ அம்பேல்!

'மாயை அரசியல்' மறையாதா?
மயக்கும் பிம்பம் உடையாதா?
வாயில் வழியும் வார்த்தைகளின்
வானவில் சாயம் வெளுக்காதா?

திசைகள் மாறிப் பயணிக்கும்
திருத்தொண்டன் நீ சிந்தித்தால்
வசைகள் நீங்கும்; வாழ்க்கை வரும்;
வானக சொர்க்கம் வாசல்வரும்!

— நா.வே. அருள்



சிறுகதை

சில அவசர வேலைக்காரர்களைத் தவிர, முக்கால்வாசி ஜனம் மழைக்குப் பயந்து எங்கேனும் கடைவாசல்களிலோ, பஸ் ஸ்டாண்ட் ஷட்டரின் கீழோ ஒடுங்கிக் கொண்டு இருந்தது. எங்கள் கடை வாசலில் கூட சிலர் ஒதுங்கி நின்று வேடிக்கை பார்த்தனர். கோடை மழை அல்லவா. திடுமெனப் பெய்யும். நிற்கும்.

உள்பக்கம் ஜெராக்ஸும், வெளி வராண்டாவில் 'ஜாப் டைப்பிங்கும்' சேர்ந்த கடை எங்களது.

நல்லவேளை, சாரல் இந்தப் பக்கமாய் வந்து விழவில்லை. விழுந்திருப்பின், டைப் அடிக்க முடியாது. மிஷினை நகர்த்திக் கொண்டு உள்ளே செல்ல வேண்டி வரும்.

அடித்து முடித்த மேட்டரைத் தனியே எடுத்து அதன் இரண்டு கார்பன் பிரதிகளோடு கஸ்டமரிடம் கொடுத்துக் காசை முதலாளியிடம் கொடுக்கச் சொன்னேன். விரல்களில் இதமாய் நெட்டி முறித்துக் கொண்ட போது ஒரு காப்பி குடிக்கலாம் போல் தோன்றிற்று.

அடுத்தாற்போலவே 'காப்பி' குடிக்க ஒரு சின்னக் கடை இருக்கிறது. ஆனால் வாசலில் மழைக்கு ஒதுங்கிய கும்பலினூடே சற்று சிரமப்பட்டுத் தான் செல்ல வேண்டும். எதற்கு...? காப்பி வேண்டாம் என்று தோன்றிற்று. 'இரண்டு ரூபாய் மிச்சம்' என்கிற எண்ணத் திருப்தி கூடவே உண்டாயிற்று.

ஆனால் இவ்விதம் மிச்சப்படுத்தி, இதில் வாங்குகிற ஐநூறும், சாயங்காலம் வக்கீல் வீட்டிற்குப் போய் ஓவர்டைம் வேலை பார்த்து, கொண்டு வருகிற சில நூறுகளும் தான் ஓரளவு கௌரவமாய் வாழ உதவுகிறது என்பது ஏனோ மணிக்குப் புரியாது போயிற்று.

மணி எனக்கு அடுத்துப் பிறந்தவன். அப்பா இருக்கையில் ஆசைக்கு ஒன்று, ஆஸ்திக்கு ஒன்று என்று நாங்கள் பிறந்தோம். ஆனால் 'ஆஸ்தி' எல்லாம் அப்பாவோடு போயிற்று. தம்பி ஆஸ்தியை அழிக்க வந்தவன் மாதிரிதான் நடந்து கொண்டான்.

அதனாலேயே அவனுக்கும் எனக்கும் வரவர அதிகம் பேச்சுவார்த்தை நேருகிறதில்லை. சின்னச் சின்ன வார்த்தைகளாய், "ஆமாம்", "உண்டு", "அப்படியா", "பார்க்கலாம்"– இது மாதிரியே தான் சம்பாஷணை நிகழும். நேற்றைக்குத் தான் சற்று அதிகப்படியாகி விட்டது.

நேற்று சாயங்காலம் வேலை முடிந்து வரும்போதே லேசாய் தலைவலித்த மாதிரி இருந்தது. அதோடு வழியில் சுமதி பார்த்துச் சொன்ன தகவல் அதிகம் மண்டைக் குடைச்சலை ஏற்படுத்தி விட்டது.

யாரோ கல்யாணியாம். அவள் டைப் அடிக்க இன்ஸ்டிடியூட் போகும் சமயம் பார்த்து, தினமும் பின்னால் சென்று கேலியும் கலாட்டாவும் செய்கிறானாம். கல்யாணியின் அம்மா என் தோழி சுமதியிடம், "உன் பிரெண்டுகிட்ட சொல்லி, அவ தம்பியைக் கண்டிக்க வைக்கச் சொல்லும்மா. நாங்க என்ன பொழுது போகாதயா பொண்ணை வெளிய அனுப்பறோம். ஏதோ பிளஸ் டூ முடிச்சிருக்கா. இதையும் கத்து வச்சிக்கிட்டா, வேலை கிடைக்க வாய்ப்பிருக்கு. அது சம்பாதிச்சுதான் அது வாழ்க்கையைக் கரையேத்திக்கணும். ஆரம்பத்துலயே இப்படி இம்சை பண்ணினா என்ன பண்றது. நாங்க தாயும், மகளும் கிணத்துலதான் போய் விழணும்" என்று சொல்லியிருக்கிறாள்.

அவள் சொல்லச் சொல்ல என்னுள் ரௌத்திரம் பொங்கிற்று. பாவம் அந்தப் பெண். என் மாதிரித்தான் அதுவும். நாளை என் போலவே எங்கேனும் 'ஜாப் டைப்பிங்' செய்யக் கூடும். அதைப் போய் தொந்தரவு செய்திருக்கிறானே இவன்? வீடு இருக்கிற நிலைமையும், அக்கா சம்பாதித்து வாழ வேண்டி இருக்கிறதே என்ற உணர்வும் கொஞ்சமேனும் இருப்பின், இப்படிச் செய்து இருப்பானா?

அந்தக் கோபம்தான் வீட்டினுள் நுழைந்




தி. சிவசுப்ரமணியன்

ததும் நுழையாததுமாய் அவனைப் பளா ரென்று கன்னத்தில் அடிக்கத் தூண்டிற்று. ஆனால் அதற்கே ரோஷம் பொத்துக் கொண்டு வந்து விட்டது அவனுக்கு.

"வேலை பார்க்கிற திமிர்ல, வளர்ந்தவன்னு கூடப் பார்க்காம கை நீட்டி அடிச்சிட்டே யில்ல? போறேன். இனிமே இந்த வீட்டு வாசப் படிய மிதிக்க மாட்டேன்."

சட்டையை மாட்டிக் கொண்டு 'விர்' என்று போனான். போகட்டும். எப்படியோ போகட்டும். வளர்ந்தவனாம் வளர்ந்தவன்... வளர்ந்தவன் செய்கிற காரியமா இது என்று தோன்றிற்று. ஆனால், அம்மா முகம் தான் வாடி இருந்தது. 'என்ன இருந்தாலும் பொம் பளைப் புள்ளை வேற வீட்டுக்குப் போறவ. நாளைக்கு நம்மைக் காப்பாத்தறதுக்கு அவன் தானே வேணும்' என்கிற ரீதியிலான சிந்தனை அவள் மனத்தில் ஓடிக் கொண்டிருக்கும் என்பதை என்னால் உணர முடிந்தது.

"உங்களைத்தாம்மா...?" எதிரே இருந் தவர் இரண்டாம் முறையாகக் கேட்டபிறகே, எண்ண ஓட்டங்களில் மூழ்கி விட்டிருந்தது புரிந்தது. அதன்பின் விரைவாய் அவருக்கு மேட்டர் அடித்துக் கொடுத்து விட்டு, வீட் டுக்குக் கிளம்பினேன்.

வீட்டிற்குள் நுழைகையில், சமையலறை யில் அம்மா சாப்பாடு எடுத்து வைத்துக் கொண்டிருக்க, தம்பி மணி சாப்பிட்டுக் கொண்டிருந்ததைப் பார்க்க முடிந்தது.

என்னைப் பார்த்ததும் சாப்பிடுவதை நிறுத்தி, சற்றுத் தலை குனிந்து கொண்டான்.

"ஏண்டா வருத்தப்படறே. கம்மா சாப்பிடு. அவ யாரு. உன் அக்காதானே. அன்னிய மனுஷியில்லையே. ஏதோ கோபம். அவ அடிச்சிட்டா. அவளுக்கு அதுக்கு உரிமை யுண்டு. நீயும் ஏதோ மனத்தாங்கல் பட்டுப் போனே. அதான் வந்து, என் வயித்துல பாலை வார்த்துட்டியே, இனிமே என்ன... எல்லாம் சரியாப் போகும். நீ காப்பி குடிக்கலையாடி?"

அம்மாவால் எப்படி இதை இவ்வளவு எளிதாய்ப் பார்க்க முடிகிறது? பிள்ளைப் பாசமா? இருக்கும்.

சாப்பிட்டு முடித்ததும் தம்பி அறை வாசலில் தயங்கி நின்றான்.

"அக்கா" என்றான் மெல்லிய குரலில். ஏறிட்டுப் பார்த்தேன், 'என்ன' என்பது போல.

"மன்னிச்சிருக்கா. ஏதோ போறாத நேரம். அப்படி நடந்துகிட்டேன்."

ஆச்சரியமாயிருந்தது. யார், மணியா இப்படிப் பேசுவது? பரவாயில்லை. இந்த மட்டும் புத்தி இருக்கிறதே. இதுவே போதும் என்று தோன்றிற்று.

"ஒரு இருவத்தஞ்சி ரூபா இருக்குமாக்கா? போஸ்டல் ஆர்டர் வாங் கணும். ரெயில்வேல ஒரு வேலைக்கு 'கால்ஃபார்' பண்ணிருக்கான்."

எடுத்துக் கொடுத்தேன். நிச்சயம் அது பொய்தான். எந்த வேலைக்கும் ரெயில் வேயில் கால்ஃபார் செய்ய வில்லை. நன்றாகத் தெரி கிறது. முடியாது என்று சொல்லி விடலாம். ஆனால் அது மேலும் பிரச்னையை வளர்க்கத்தான் செய்யும்.

இப்போது வீட்டில் நிலவுகிற இந்த 'இணக்க மான' சூழலை ஏன் கெடுக்க வேண்டும்? யோசனையுடன் ஜன்னல் வழியே பார்த்தபோது, மழை தூறிக் கொண்டிருந் தது. கோடை மழையில் பூமி குளிராதுதான். ஆனால் வெப்பம் குறையுமே, போதாதா?

## 18. விக்கலன் கேட்ட வரம்

ஸ்காந்தபுரத்தையும் தறையூர் நாட்டையும் பிரித்த அமராவதி நதியில் கார்காலம் துவங்கி மழை பொழிந்ததால் நீர்மட்டம் சற்றே உயர்ந்திருந்தது. தனது கரையிலிருந்த பாசறையில் இருபெரும் படைத்தலைவர்கள் இருக்கிறார்கள் என்பதை உணர்ந்ததாலோ என்னவோ, அந்த நதி நிரம்பித் ததும்பினாலும், கரைகளைத் தாக்கிய அலைகளைக் குறைத்துக் கொண்டு அமைதியாக ஓடியது.

ஆற்றின் கரைகளில் இரைக்காக வந்து இறங்கிய நாரைக் கூட்டமொன்று கரையோரம் நின்றிருந்த வீரர்களையும் அவர்களது விற்களையும் கண்டு அஞ்சியதால் ஒன்றாகச் சேர்ந்து பெரிதாகக் குரல் கொடுத்துவிட்டு, தெற்கே விரிந்திருந்த வயல்களை நோக்கிப் பறந்தன. அந்த நாரைகளுக்கு ஏற்பட்ட அச்சத்தைவிட அதிக அச்சத்தைக் காட்டிய வீரர்களின் முகங்கள், அக்கரையில் பாண்டியர் கொடியுடன் நின்ற வீரனையும், விக்கலனுடன் சென்று கிருஷ்ணமல்லர் நுழைந்துவிட்ட கூடாரத்தையும் மாற்றி மாற்றி வெறித்துக் கொண்டிருந்தன.

படைத்தலைவர், தான் தூது வந்த காரணத்தை விக்கலனிடம் விளக்கத் தொடங்கியிருந்தார் : "விக்கலா, நான் தூது வந்த காரணம் மிக எளிமையானது. படைகளை நான் நடத்தி வந்திருந்தால் பாண்டியருக்காக ஓர் உபதலைவனைத் தூதனுப்பி வைத்திருப்பேன். ஆனால் தற்போது படைகளை நடத்தி வந்திருப்பவர் என்னைவிட உயர்ந்தவர். நீயும் சாதாரணப் படைத்தலைவன் அல்ல. போசள மன்னனின் பிரதிநிதியாக வந்திருப்பவன்..."

விக்கலன் விழிகளில் வியப்பு விரிந்தது. "அப்படியானால் தாங்கள் படைகளை நடத்தவில்லையா? இளைய பாண்டியர் படைகளுடன் வந்திருக்கிறாரா?" என்றான் விக்கலன் வியப்புடன்.

கிருஷ்ணமல்லர், 'இல்லை'யென்பதற்கடையாளமாகத் தலையசைத்தார். "இல்லை விக்கலா. பாண்டியர் படைகளை இப்போது நடத்தி வந்திருப்பவர் ஜடாவர்ம சுந்தர பாண்டியத் தேவர்" என்றார் நிதானமாக.

விக்கலனின் வியப்பு இன்னும் அதிகரித்தது. "என்ன கூறுகிறீர் படைத்தலைவரே! இந்தச் சாதாரண தண்டநாயகனுக்கெதிராக பாண்டிய மன்னரே படைகளை நடத்தி வந்திருக்கிறாரா?" என்றான் வியப்பு வழிந்த குரலில்.

"இப்போது தொடங்கும் போர் ஸ்காந்தபுரத்தோடு நிற்கப் போவதில்லை விக்கலா! கொங்கு நாட்டின் வட எல்லையைக் கடந்து போசளரின் தென் எல்லை வரை தொடரும். கொங்கு நாட்டின் வட எல்லைக்கு முன்னால் போசள மன்னரை எதிர்பார்க்கிறார் பாண்டிய மன்னர்..." என்ற கிருஷ்ணமல்லர், தொடர்ந்து, "சோழ எல்லையில் போசள வீரரை முன்னறிவிப்பின்றித் தாக்கியதன் காரணம் சேமகேசி!" என்றார்.

"சேமகேசியா?"

"ஆம். சாளுக்கிய சேமகேசி பாண்டியர் கோட்டையில் போலியான பெயரில் நுழைந்தது ஒரு குற்றம். அங்கு வேவு பார்த்தது மற்றொரு குற்றம். உத்தமபாளையத்தைக் கைப்பற்ற படைகளுடன் வந்ததும் குற்றம். எல்லாவற்றுக்கும் மேலாக கொங்கு இளவரசியைக் கடத்திச் சென்றது பெருங்குற்றம். இதில் ஏதாவது ஒரு குற்றத்திற்கே அவனைக் கொல்லலாம். ஒற்றனை அழிக்க முன்னறிவிப்பு அவசியமில்லை. இன்னும் ஒரு காரணமுமிருக்கிறது..."

"இன்னொரு காரணமா?"

"ஆம். நீ இருக்கும் இந்த இடத்தில் இருக்க வேண்டியவன் சிங்கணன். அவனால் சோழ மக்களுக்கும் கொங்கு நாட்டிலும் ஏற்பட்ட இன்னல்கள் கொஞ்சமல்ல. சிங்கணன் வந்திருந்தால் நேரடியாகத் தாக்குதலைத் தொடங்கியிருப்பேன். உன் வருகை நேற்று பிற்பகலில்தான் எனக்கு அறிவிக்கப்பட்டது" என்றார் கிருஷ்ணமல்லர்.

"நான் மட்டும் என்ன விதிவிலக்கு?" - விக்கலனின் கேள்வி உடனே வந்தது.

கிருஷ்ணமல்லர் நகைத்தார். நகைப்பினூடே, "இங்கு சிங்கணன் இருந்திருந்தால் தனியாக வந்திருக்கும் என்னை வீரரை விட்டுச் சிறை செய்யவோ அழிக்கவோ முயன்றிருப்பான். நீ சுத்த வீரன் என்பதையும், உன்



**விஷ்வக்சேனன்**

# இந்திர தனுசு

போர் முறைகளைப் பற்றியும் யாதவ இளவல் பலமுறை கூறியிருக்கிறான்" என்றார்.

விக்கலன் பிரமித்தான். "யாதவ இளவல் தங்களுக்கு..."

"யாதவ கிருஷ்ணன் எனது சீடன்" என்றார் கிருஷ்ணமல்லர் முறுவலுடன்.

தெற்கே பாண்டியர் போரைத் தொடங்கும் தருணத்தில் வடஎல்லையில் யாதவர்கள் படைகளைக் குவிப்பதாக வந்த செய்தியின் பொருள் விளங்கியது விக்கலனுக்கு. போசளரை தமிழகத்திலிருந்து விரட்ட பாண்டியர் திட்டம் வகுத்து நீண்ட காலமாகி விட்டதென்பதும் அவனுக்குப் புரிந்தது.

சற்று நேரம் சிந்தனையில் ஆழ்ந்தவன், "படைத்தலைவரே, தாங்கள் தூது வந்த விவரத்தைக் கூறுங்கள்" என்றான்.





## அட பரமசிவனே!

பேராசைக்கார தனவந்தன் ஒருவன் ஏழை எளியோர் என்று கூடப் பாராமல் வட்டிக்கு வட்டி வாங்கிப் பொருள் சேர்த்து வந்தான். தான, தர்மமெல்லாம் அவனுக்குப் பிடிக்காத விஷயமென்றாலும் அடிக்கடி "அட, பரமசிவனே!" என்று கூறுவான். இப்படி நாளெல்லாம் சிவநாமத்தை உச்சரிக்கிற காரணத்தால் அவனுக்கு ஞானம் வழங்க முடிவு செய்தார் சிவபெருமான்.

ஒரு பரதேசியாக உருவெடுத்த சிவபெருமான் அந்தத் தனவந்தனின் ஊரையடைந்தார். கையில் திருவோடேந்தி வீடு களில் பிச்சையெடுத்து வந்தார். அவருடைய திருவோடு நிறையு மளவுக்குத் தனமோ, தானியமோ பிச்சையிட்டவர்களுக்குப் பொருள்வளம் கூட்டினார். இந்த அதிசயப் பரதேசி யின் மகிமை பற்றிக் கேள்விப்பட்ட தனவந்தன், அவருக்குப் பிச்சையிடுவதன் மூலம் தான் இன்னும் பொருள் சேர்க்க ஆசைப்பட்டு அவரை அழைத்துவரச் செய்தான்.

சிவபெருமானும் கையில் திருவோட்டுடன் பரதேசிக் கோலத்தில் வந்து நின்றார். பிச்சையிடுவதற்குத் தயாராக நின்ற தனவந்தனிடம், "தனவானே, நீ அளிக்கும் பிச்சையில் என் கையிலுள்ள திருவோடு நிரம்பி வழிய வேண்டும். அதுவரை பிச்சையிடுவதை நிறுத்தக் கூடாது. அப்படி நிரப்பிவிட்டால் உன் செல்வம் பன்மடங்கு பெருகும். இல்லையேல் நீ பிச்சையிட்ட பொருளும் உனக்குத் திரும்பக் கிடைக்காமல் போய் விடும்!" என்று எச்சரித்தார் பரதேசி.

இந்தத் திருவோட்டை நிரப்புவதா பெரிய விஷயம் என்கிற ஆணவத்தோடு பிச்சையிட்டான் தனவந்தன். திருவோடு நிரம்பும் வழியாய் இல்லை. தனது எல்லாப் பொருள்களையும் பிச்சையிட்டு கட்டிய துணியுடன் மட்டுமே நின்ற தனவந்தனுக்கு வந்திருப்பது யாரென்று புரிந்தது. சிவபெருமானும் தமது சுவரூபத்தில் தரிசனம் தந்து, "பக்தனே, உன்னுள் இருந்த ஆசை என்னும் மாயையைத்தான் திருவோடாக்கி யாசித்தேன். ஆசைக்கு அளவேது? ஆகவேதான் எவ்வளவு முயன்றும் உன்னால் என் திருவோட்டை நிரப்ப முடியவில்லை. இனியாவது பேராசை ஒழித்து ஏழை - எளியவர்களிடம் கருணையோடு நடந்து கொள்!" என்று கூறித் தாம் பிச்சையாகப் பெற்றதையும் அவனுக்கே திரும்பிக் கொடுத்து மறைந்தார். தனவந்தனும் திருந்தி வாழ்ந்து நற்கதியடைந்தான்.

- ஓர் ஆன்மீகச் சொற்பொழிவிலிருந்து—
தகவல் : ஆண்டார்கை சுந்தரம்



கிருஷ்ணமல்லரின் குரல் கணீரென்று ஒலித்தது. "போசள தண்டநாயகரே! தமிழகத் தின் பெரும்பகுதி போசளர் ஆட்சியில் பெரி தும் சீரழிந்து விட்டது. கொங்கு மன்னன் அவ நிதன் எமது உதவியைக் கோரியிருக்கிறான். கொங்கு நாட்டை அவநிதனிடம் ஒப்படைத்து விட்டு, போசள வீரர் அனைவரும் நாடு திரும்பிவிட வேண்டும். இதை ஏற்பதால் அனாவசியமான உயிர்ச் சேதமும், போரும் தவிர்க்கப்படும். இதைத் தெரிவிக்கவே வந்தேன்."

விக்கலன் நகைத்தான். நகைத்துவிட்டு, "போசளரை விரட்டி விட்டு பாண்டியர்கள் கொங்கு நாட்டை ஆக்கிரமிக்க நினைக்கிறீர் கள். இந்த மண் எப்படியும் அடிமை பூமிதான். அதற்குத்தானே இந்தப் போர்?" என்றான்.

கிருஷ்ணமல்லரின் முறுவல் சற்று விரிந்தது. "தவறு விக்கலா! போசள வீரர்களையும் சேம கேசியையும் அழித்த பின்னர், எமது படை சோழ நாட்டுக்குள் நுழையவில்லை என்பதை நீ அறியவில்லையா? அந்த மண்ணைச் சேர்ந்தவர்களையே அந்த நாட்டில் ஆட்சி நடத்த உதவுவதுதான் பாண்டிய மன்னரின் நோக்கம். வெற்றி கண்டபின்பு வென்றவரை அடிமையாக்குவது பாண்டிய மன்னர் விரும் பாத ஒன்று. இங்கும் அதே கதைதான் நிகழப் போகிறது" என்றார் கிருஷ்ணமல்லர்.

படைத்தலைவர் கூறியதில் உண்மை நிரம்பிக் கிடப்பதை உணர்ந்த விக்கலன் சற்று சிந்தித்தான். அடுத்து அவன் பதில் தெளிவா கவே வந்தது. "ஆனால் படைத்தலைவரே, இது மன்னர்கள் கூடி முடிவு செய்ய வேண்டிய விஷயம். நான் போசள மன்னர் உத்தரவை நிறைவேற்றும் வெறும் கருவி. பாண்டியரைத் தடுத்து நிறுத்த உத்தரவிட்டிருக்கிறார் எமது மன்னர். அதை நிறைவேற்றவே நான் வந்தி ருக்கிறேன்."

"நீ சொல்வதிலும் ஒரு நியாயம் இருக்கவே செய்கிறது" என்று சலித்தபடியே எழுந்த கிருஷ்ணமல்லர், "சரி, விக்கலா, இன்னும் அரை ஜாம நேரத்தில் படைகளுடன் வருகிறேன். சித்தமாக இரு" என்றபடியே வாயிலை நோக்கி நடந்தார்.

"படைத்தலைவரே" - விக்கலனின் குரல் அவரைத் தேக்கியது.

"என்ன விக்கலா?" கிருஷ்ணமல்லரின் குரலில் சந்தேகம் ஒலித்தது.

"தங்கள் கரத்தால் நான் மடிய நேரிட்டால் என் பாக்கியம் என்று கருதுவேன்" என்றான் விக்கலன்.

மீண்டும் திரும்பி விக்கலனை நெருங்கிய கிருஷ்ணமல்லரின் யானை விழிகள், அவனை ஊடுருவிப் பார்த்தன. மல்லரின் வலிய கரம்

எழுந்து அவன் தோளில் பதிந்தது. "விக்கலா, உன் வீரத்திற்கு முழு வாய்ப்பையும் அளிக்கிறேன். நான் யந்திரப் பொறிகள் எதையும் இந்தப் போரில் பயன்படுத்தவில்லை. ஆனால் கோட்டைக்குள்ளிருக்கும் பொறிகளை நீ பயன்படுத்த எந்தத் தடையுமில்லை. உன்னையும் உன் வீரர்களையும் காத்துக் கொள்" என்றவர் திரும்பி வாயிலை நோக்கி நடந்தார்.

அடுத்த அரைஜாமத்தில் போரைக் காண விரும்பிய கதிரவன் சற்று மேலேறினான். கறுத்த மேகங்களும் பறவைக் கூட்டங்களும் அச்சத்தால் தூரத்து மலைகளை நோக்கி நகர்ந்தன. தெற்கில் மீண்டும் எழுந்த புழுதி மண்டலம் ஸ்காந்தபுரத்தை நோக்கி நகரத் தொடங்கியது.

நதிக்கரைக்கு ஒரு காத தூரம் இருக்கையில் வேகமெடுக்கத் தொடங்கிவிட்ட பாண்டியர் புரவிப்படை தூரத்தில் வரும்பொழுதே நிலத்தை தடதடவென அதிர வைத்தது. கிருஷ்ணமல்லரின் முரட்டு அரபுப் புரவி, முன்னால் அசுர வேகத்தில் பாய்ந்து வர, அவரது சீடர்களான மல்லர்களைக் கொண்ட தனிப் பிரிவு தொடர்ந்து வந்தது. அளவில் பெரியதாகவும் கனமாகவும் நீண்ட சதுர வடிவங்களிலிருந்த கேடயங்களை உயர்த்திப் பிடித்தபடி பெரும் வாட்களைச் சுழற்றிய படியே நதியிலிறங்கிய மல்லர்கள் மீது போசள வீரர்கள் தொடுத்த அம்புகள் ஏறக்குறைய பயனற்றுப் போயின. அதையும் மீறிப் பாய்ந்த இரண்டொரு அம்புகளை அனாயாசமாகப் பிடுங்கி எறிந்த கிருஷ்ணமல்லர், கரையேறியதும் முதலில் வில்லாளிகளை துவம்சம் செய்ய தமது சீடர்களுக்கு உத்தரவிட்டார்.

தங்கள் கேடயங்களால் போசள வீரர்களுக்குக் கபால மோட்சமளித்தும் பெரும் வாட்களால் சீவியும் நான்கு வரிசைகளையும் அழிக்கத் தொடங்கினர் கிருஷ்ணமல்லரின் சீடர்கள்.

சற்று இடைவெளி விட்டு மீண்டும் ஒரு புரவிப்படைப் பிரிவு நதியிலிறங்கியது. பூரண கவசங்களுடனும் உயர்த்திய நீண்ட வாளுடனும், சிங்க விழிகளுடனும் தனது பெரும்புரவியில் முன்னால் வந்து கொண்டிருந்தான் ஜடாவர்ம சுந்தரபாண்டியன். கிருஷ்ணமல்லர் வழியமைத்துக் கொடுத்த பாதையில் முன்னேறிய பாண்டிய மன்னன், விக்கலன் படைப் பிரிவுகளை இரு பிரிவுகளாகப் பிரித்து, நேருக்கு நேர் மோதித் தாக்குதலைத் துவங்கினான்.

போசள வில்லாளிகளை முழுவதுமாக அழித்துவிட்ட கிருஷ்ணமல்லரின் சீடர்கள், மீண்டும் அணிவகுத்து விக்கலனது படையை மேற்கில் ஊடுருவத் தொடங்கினர். கிருஷ்ண



"டில்லியிலேருந்து வரும் தலைவர் பெரிய்ய பெரிய்ய மூட்டைங்களோட வர்றாரே, ஏன்?"

"சூட்கேஸுங்களை எடுத்துவந்தா எதிர்க்கட்சிக்காரங்க பணம் கொண்டு வந்ததா பிரசாரம் பண்ணுறாங்களாம்!"

- வளர்மதி ஆசைத்தம்பி

மல்லரும் அவரது தனிப்படையும் போசள வீரர்களும் போரிட்ட பகுதியில் ஏற்பட்ட சேதம், அளவிட முடியாததாயிருந்தது. போசள வீரர்களைக் கேடயங்களாலும் மூன்று நான்கு வீரர்களை ஒன்றாகச் சீவித் தள்ளிய பெரும் வாட்களாலும் கடுமையாக கிருஷ்ணமல்லரின் சீடர்கள் தாக்கிக் கொண்டிருந்தனர். மேற்குப் பகுதியில் ஏற்பட்டுக் கொண்டிருந்த நாசத்தைக் கவனித்த விக்கலன், பாண்டிய மன்னன் தனது பிரசித்தி பெற்ற யானைப் படையை அழைத்து வராததன் காரணத்தைப் புரிந்து கொண்டான்.

சுந்தரபாண்டியனின் நீண்ட வாளுடன் தனது வாளை உராயவிட்ட விக்கலன், தனது படை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு தாக்கப்பட்டதை உணர்ந்தான். கிருஷ்ண மல்லர் குறுக்கில் திரும்பி தனக்கு நேர் வலது புறத்தில் ஊடுருவத் தொடங்கியதையும் கவனித்தான். அவர் உத்தேசத்தைப் புரிந்து கொண்டான். மன்னன் பிரிவுடன் மல்லர்களின் பிரிவு இணைய முற்படுவதைக் கண்டு, அவை ஒன்றாக இணைந்து விட்டால் விளைவு விரும்பத்தகாததாக இருக்கும் என்பதையும் உணர்ந்து கொண்டதால் தனது வீரர்களைக் கோட்டையை நோக்கிப் பின்வாங்க உத்தரவிட்டான்.

விக்கலன் மெள்ள பின்வாங்கத் தொடங்கியதையும் கோட்டையை அடைந்து அதன் பாதுகாப்பில் போரிடுவது உசிதம் என்று அவன் தீர்மானித்ததையும் புரிந்து கொண்ட பாண்டிய மன்னன் முகத்தில் முறுவல் ஒன்று பிறந்தது. அடுத்து அவன் செய்த சமிக்ஞையைத் தொடர்ந்து, மெள்ள தாக்குதலின் வேகத்தைக் குறைத்துக் கொண்ட பாண்டிய வீரர்கள் விக்கலனை முழுவதுமாகப்



"அவர்தாண்டா உண்மையான தலைவர்!"

"எப்படிச் சொல்றே?"

"யாரோட கூட்டு வச்சுக்கலாம்னு கேட்டா தேர்தல் முடியட்டும், அப்புறம் பார்த்துக்கலாம்னு சொல்லிட்டார்!"

- புளியரை கணேசன்

பின்வாங்கி கோட்டையை நோக்கிச் செல்லவும் அனுமதித்தனர்.

விக்கலனும் அவன் வீரர்களும் கோட்டைக்குள் நுழைந்த அடுத்தகணம் கோட்டையின் கதவுகள் பெரும் சப்தத்துடன் அறைந்து மூடப்பட்டன. உள்ளே நுழைந்த விக்கலன் சிறைச் சாலைப் பகுதியிலிருந்து எழுந்த கூச்சல்களை சட்டை செய்யவில்லை. இரண்டு சுற்றுக்களாகத் தொடர்ந்த மதில்களின் மீதிருந்த பொறிகளைச் சுவர்களின் இடையேயிருந்த இடைவெளியை நோக்கித் திருப்பச் செய்தான். இரண்டாவது சுற்றின் வாயிலிலிருந்த யவனப் பொறிகளை, வரும் புரவி வீரர்களைத் தாக்குமாறு இயக்கவும் உத்தரவிட்டான். தனது ஏற்பாடுகளை முடித்துக் கொண்டு, கோட்டை மதிலின் உச்சிக்கு வந்த விக்கலன், பாண்டியர் படை மீண்டும் அணிவகுத்து எதிரே நிற்பதையும், கிருஷ்ணமல்லரின் முரட்டுப் புரவி முன்னால் அதே சமத்கார நடையுடன் குறுக்கிலும் நெடுக்கிலுமாக நடப்பதையும் அவர் சரமாரியாக ஏதோ உத்தரவுகள் இட்டுக் கொண்டிருப்பதையும் கண்டான்.

ஸ்காந்தபுரத்திற்கு நேர் கிழக்கில் பத்து காத தூரத்தில், சோழ எல்லையை நோக்கிச் சென்ற பாதையின் இரு பக்கங்களிலும் வரிசையாகக் கூடாரங்கள் பல நின்றிருந்தன. முன்னணியில் நின்ற கூடாரத்தின் மீது பறந்த பாண்டியரின் பெரும் கொடி, ஸ்காந்தபுரத்தை விழுங்கிவிடத் துடிப்பது போல படபடத்துக் கொண்டிருந்தது! சோழ எல்லையில் சேமகேசியையும் போசள வீரர்களையும் அழித்து விட்டுக் கிளம்பிய அந்தப் படைப் பிரிவு ஸ்காந்தபுரத்தை நெருங்க நெருங்க, அதிகமாக வளர்ந்திருந்தது. பாண்டிய வீரர்களுக்கான உடையில் இல்லாத, சாதாரண உடைகளிலிருந்த வீரர்களின் எண்ணிக்கை அதிகமாகவும் தெரிந்தது. கூடாரத்தினுள் அமர்ந்து, எதிரில் நின்றவனையும் அருகிலிருந்த யுவானையும் ஏறிட்ட ஆதித்யனின் கரங்களில் ஓலைக் குழலொன்றும் இருந்தது.

ஆதித்யனின் எதிரில் நின்றிருந்தவன் அதிக உயரமில்லையென்றாலும் நல்ல திடகாத்திரமாயிருந்தான். உலையிலிடப்பட்ட நல்ல செப்பின் நிறத்திலிருந்தது அவன் முகம். சுருள் சுருளாக இரும்புத் துருவல்களைப் போலிருந்த அவன் குழல்கள் பார்வைக்குச் சற்று விசித்திரமாயிருந்தாலும் ஒரு களையை அளித்துக் கொண்டிருந்தன. அவன் விழிகளில், அடக்கப்பட்ட வேங்கையின் வேகம் தெரிந்தது. அந்த மனிதனை ஒருமுறை உற்றுநோக்கிய ஆதித்யன்,

"சூரிய காங்கேயா! படைத் தலைவரது உத்தரவு திட்டவட்டமாக இருக்கிறது. நீ திரட்டியிருக்கும் விடுதலைப் படையை மட்டுமல்ல, சோழ எல்லையிலிருந்து இந்தப் போருக்காகவே வீரர்களை நடத்திக் கொண்டு வந்திருக்கும் என்னையும் கூட ஸ்காந்தபுரத்தில் இப்போது நுழைய வேண்டாமென்றும், பாண்டிய மன்னரும், படைத்தலைவரும் கொங்குத் தலைநகரைக் கைப்பற்றி மன்னர் அவநிதரை விடுவித்த பின்பே வரவேண்டுமென்றும் உத்தரவிட்டிருக்கிறார். சிங்கணனுக்குப் பதிலாக போசள விக்கலன் அங்கிருப்பதுதான் காரணமாயிருக்க வேண்டும் என்பது என் யூகம்" என்றான்.

கொங்கு மன்னன் அவநிதனின் மெய்க் காவலனும், கொங்கு நாட்டு மக்கள் படையின் தலைவனுமான சூரியகாங்கேயனிடமிருந்து அடுத்து உதிர்ந்த சொற்களில் சிறிது ஆவேசமிருந்தது: "இந்தப் போருக்காக ஆண்டுக்கணக்கில் காத்திருக்கிறோம் இளவரசே! ஸ்காந்தபுரத்துக் கோட்டை சாதாரணக் கோட்டையல்ல, அதன் சூட்சுமங்களும் அபாயங்களும் எங்களுக்கு நன்றாகத் தெரியும்."

ஆதித்யன் இருக்கையை விட்டு எழுந்தான். "உன் உணர்ச்சிகள் புரிகிறது காங்கேயா! ஆனால் பாண்டியர் படையால் ஸ்காந்தபுரம் மீட்கப்பட வேண்டும் என்பது மன்னர் எண்ணம். அதை நீயோ, நானோ மீற முடியாது. கோட்டை கைப்பற்றப்பட்டவுடன் இங்கிருக்கும் வீரர்களை நடத்திக் கொண்டு நீ கோட்டைக்குச் செல்" என்றான் ஆதித்யன்.

காங்கேயன் முகத்தில் திகைப்பு தெரிந்தது. "அப்படியானால் தாங்கள்...?"

ஆதித்யன் இதழ்களில் முறுவல் படர்ந்தது. "என்னை குருதேவர் மாறன் அமுதனாரைச் சென்று சந்திக்க உத்தரவிட்டிருக்கிறார், இந்திர தனுசை மீட்க" என்றான் ஆதித்யன்.

(தொடரும்)

# மனுஷி மனசு

விடியும் போது பஸ் சென்னை நகருக்குள் நுழைந்தது.

இதுதான் முதல் தடவை - சென்னை நகருக்கு வருவது. 'கடவுளே... எல்லாம் நல்லபடியாக முடிய வேண்டும்... வெற்றி என்னைச் சேர வேண்டும்' என்று வேண்டிக் கொண்டேன்.

ஒரு இண்டர்வியூக்காக சென்னை நகருக்குச் செல்கிறேன். முதலில் மதுரையில் முதல் கட்ட இண்டர்வியூ. அதில் தேர்வான வர்களுக்கு சென்னையில் இறுதிக்கட்ட இண்டர்வியூ. அதற்குத் தான் செல்கிறேன்.

போக வர போக்குவரத்துக்கான கட்டணத்தைக் கொடுத்து விடுவார்கள். அதனாலேயே இந்த இண்டர்வியூவில் கலந்து கொள் கிறேன். இல்லையென்றால் குடும்பம் உள்ள நிலையில் முன்னூறு, நானூறு ரூபாய் செலவு செய்து செல்வது என்பது இயலாத காரியம்.

ஒருநாள் தங்க வேண்டும். லாட்ஜுக்குக் கொடுத்துக் கட்டாது. அப்பா, "நம்ம பக்கத்து ஊர்க்காரர் மச்சான் முறை. மெட்ராஸில்தான் இருக்கார். நல்ல உத்தியோகம். அவர் வீட்டுக்குப் போ. நல்லா கவனிச்சுப்பார்" என்றார். அப்பாவுக்குப் பயம். 'எங்கே.. இவன் இருநூறு கொடு, முந்நூறு கொடு என்று கேட்டு விடுவானோ' என்று... குடும்பச் சூழல் அப்படி.. பாவம் அவர் என்ன செய்வார்!

அப்பா அத்தனை சுலபமாய்ச் சொல்லி விட்டாரே ஒழிய எனக்குத் தானே கஷ்டம்? அந்த நபர் வீட்டுக்கு சங்கோஜமின்றி எப்படிப் போவேன்? முன்பின் தெரியாத ஒருவர்... அதுவும் அப்பாவுக்கு மாத்திரமே பழக்கமான ஒருவர்... 'உங்கள் வீட்டில் ஒருநாள் தங்கிக் கொள்ள இடம் கொடுங்கள்' என்று எப்படிக் கேட்பது?

அப்பாவின் மீது கோபம் வந்தது. ஒரு இருநூறு ரூபாய்க்குக் கூட வழி இல்லாமல் கஷ்டப்படுத்துகிறாரே என்று.. அவர் மீது கோபப்பட்டு என்ன பிரயோஜனம்? குடும்பத்தில் நிறைய உறுப்பினர்கள். குறைவான வருமானம். பாவம். அவர் என்னதான் செய்வார்?

நாளைக் காலை இண்டர்வியூ... போவோம். அப்பா சொன்ன நபர் வீட்டுக்கு சரிப்பட்டு வரவில்லை என்றால் பிறகு பார்த்துக் கொள்வோம். பஸ் ஸ்டாண்டிலோ, ரயில்வே ஸ்டேஷனிலோ இருந்து பொழுதைப் போக்கிவிட்டு இண்டர்வியூவுக்குப் போக வேண்டியதுதான்!

சென்னையை அடைந்ததும் பஸ் பிடித்து, மைலாப்பூரில் இறங்கி, அவர் அட்ரஸ் தேடிப் போய் கதவைத் தட்டினேன். சற்று நேரம் கழித்து ஒரு இருபது வயது யுவதி வந்து, கதவைத் திறந்தாள். கொட்டாவி விட்டவாறு, "யாரு வேணும்..." என்று கேட்டாள்.

"மிஸ்டர் சீனிவாசன் வீடு இதுதானே...?"

"ஆமா... அப்பாதான். உள்ள வாங்க" என்று அழைத்தவாறு, அப்பாவைத் தேடி உள்ளே போனாள். அவள் வெகு அழகாய் இருந்தாள். இன்னும் குளிக்காமல், தூக்கக் கலக்கத்தில் கூட ஒரு நிலவின் புத்துணர்ச்சியுடன் இருந்தாள். நடுத்தர வயது மதிக்கத்தக்க ஒருவர், "யாரு" என்றவர், தன் கண்ணாடியை பனியனில் துடைத்துக் கொண்டார்.

சிறுகதை • யோகி



"இங்க சீனிவாசன்ங்கிறது..."

"நாந்தான்..."

"நா மேலூரில் இருந்து வரேன். சிதம்பரத் தோட மகன்."

"மீசைக்காரர் சிதம்பரமா?" என்று சிரித்த வாறு கேட்டார்.

"ஆமா..." என்று சிரித்தேன். அப்பாவுக்கு பெரிய மீசை. மீசைக்காரர் என்ற பட்டப் பெயர் உண்டு.

"மீசைக்காரர் மகனா நீ... ரொம்ப வளர்ந் திட்டியே? உள்ள வாப்பா" என்று வராந்தா வில் இருந்து ஹாலுக்கு அழைத்துப் போனார். ஒரு நடுத்தர வயதுப் பெண்மணி எட்டிப் பார்த்துவிட்டு உள்ளே சென்றாள்.

"உட்காருப்பா."

"சிதம்பரத்துக்கு இவ்வளவு பெரிய பையனா... ஆறு, ஏழு வருஷம் முந்தி உன் னைப் பார்த்தது... அப்பாவை வருஷத்துக்கு ஒரு தடவையாவது பார்ப்பேன்..." என்றவர் அப்பாவை விசாரித்தார். "தங்கச்சி சௌக் கியமா?"

"தங்கச்சியா?"

"அதான்ப்பா.... உங்க அம்மா? அம்மா சௌக்கியமா?"

"ம். வேலை விஷயமா மெட்ராஸுக்கு வந்திங்களா... கற்பகம் காப்பி கொண்டு வா..." என்றார்.

"ஒரு இன்டர்வியூவுக்காக வந்தேன். மெட்ராஸுக்கு இது தான் பஸ்ட் டயம். அதான் அப்பா சொன்னார், உங்க ளைப் பார்க்கும்படி... அவர் உனக்கு ஏதேனும் ஹெல்ப் பண்ணுவார்னு சொன்னார்" என்று வார்த்தைகளைக் கடித் துத் துப்பினேன்.

வீட்டைப் பார்த்தேன். பெரிசாய் இருந்தது. மனசு இதுமாதிரி விசாலமாய் இருக் குமா...

காப்பி கொண்டு வந்தார் அந்தப் பெண்மணி. "கற்பகம்... உனக்கு மேலூர் சிதம்பரத்தை தெரியும்லயா" என்று கேட் டார்.

"ம்... எனக்கு பெரியப்பா மகன்தானே அவரு... சிறுசா இருக்கும் போது நா அவங்க வீட்டுக்குப் போய் இருக் கேன்" என்று பழைய நினைவு களை மீட்டினாள்.

"நானும் சின்ன வயசுல எஸ்.எஸ்.எல்.சி. இவங்க வீட் டுல இருந்துதான் படிச்சேன். இவங்க அப்பா, தாத்தா எல்லோரும் நல்ல தங்கமான மனசுக்காரங்க. இப்ப கொஞ்சம் நொடிச்சுப் போயிட்டதா கேள்விப்பட்டேன். நானும் உன் அப்பாவும் அந்தக் காலத்துல ரொம்ப தோஸ்த்... நீ நம்ம மாப்பிள்ளை" என்று சிநேகமாய் தோளைத் தட்டினார்.

படிப்பைப் பற்றி விசாரித்தார். பிறகு தன் பிள்ளைகளை அறிமுகப்படுத்தினார். ஒரு மகள், ஒரு மகன்... மகள் பி.எஸ்.சி. பைனல் இயர். பையன் நைன்த் படிக்கிறான்.

"சரிப்பா... குளிச்சிட்டு சாப்பிடு. எதுக்கு வெட்டியா லாட்ஜில் தங்கிட்டு நூறு, இரு நூறைக் கொடுத்துட்டு.. டேய் விஜய்... உன் ரூமை மாமாக்கு இன்னிக்கு மட்டும் கொடு" என்றார்.

குளித்தேன். அவரே மேலே வந்து சாப் பிட அழைத்தார்.

"பிறத்தியார் வீடுன்னு சங்கோஜப்படாதே. இது நம்ம வீடு! நானும் உன்னை மாதிரி மெட் ராஸ் வந்த புதிதில் ரொம்பக் கஷ்டப்பட்டு இருக்கேன்!" என்றார்.

பிறகு அவர் ஆபீஸுக்குக் கிளம்பி விட் டார். அவர் பெண் கல்லூரிக்குக் கிளம்பி னாள். பையன் ஸ்கூலுக்குக் கிளம்பிவிட்டான். கற்பகம் அத்தை மாத்திரம் இருந்தார். நான்

வெளியே கிளம்பினேன். அங்கு இருக்க சங்கடமாய் இருந்தது. எப்படித் தனியாக இருப்பது? 'என்னப்பா வெளியே கிளம்பிட்டியா.. இண்டர்வியூன்னு சொன்னே.. ஒண்ணும் பிரிபேர் பண்ணலையா...?''

"கோவிலுக்குத்தான் போறேன். பத்து நிமிஷத்துல வந்துடுவேன்."

சொல்லிவிட்டுப் போய் பத்து நிமிஷத்தில் திரும்பினேன். அவர்கள் வீட்டில் எல்லோரும் நன்றாகப் பழகினார்கள். பேசினார்கள். அந்தப் பெண் முதற்கொண்டு...

சீனிவாசன் கேட்டார். "பேஸிக் ஸாலரி எவ்வளவு?" என்று.

"கிட்டத்தட்ட ஐந்தாயிரம்..."

"நல்ல கம்பெனி.. நல்ல வேலை.. கடவுளை வேண்டிக்கோ" என்றார்.

இரவு ஒன்றாய் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டு இருந்தோம். அப்போது ஒரு பெண் மணி வந்தாள். சற்றே ஏழைமையான தோற்றம். கற்பகம் அத்தை எழுந்து போய் ஒரு டிபன் கேரியரில் சாப்பாடு வைத்து கொடுத்துவிட்டு வந்தாள். "வர்றேன்க்கா" என்று அந்தப் பெண் மணி சென்றாள்.

சீனிவாசன் நான் கேட்காமலே அந்தப் பெண்ணைப் பற்றிச் சொன்னார்.

"சொந்தக்காரப் பொண்ணு. புருஷன் சரியில்ல. ரொம்ப கஷ்டப்படுற குடும்பம். ஏதோ நம்மால் முடிஞ்ச உதவிய அப்பப்ப செய்யறோம். ரெண்டு, வயசுப் பொண்ணுங்க வேற இருக்கு. எப்படி அதுகளைக் கரையேத்தப் போறாங்களோ. வீட்டுல தகப்பன் சரியில்லைன்னா எதுவும் சரியா இருக்காது."

நான் சாப்பிட்டு விட்டு மாடிப்படியில் ஏறுகையில் தம்பதியர் பேசியது காதில் விழுந்தது.

"ஏங்க இந்தப் பையன் நல்ல பையனா இருக்கானே. இந்த கமலாவோட பொண்ணுக்கு இந்தப் பையனை பார்க்கலாமே... ரெண்டு பேருமே கஷ்டப்படுற குடும்பம்... சரியாப் போயிடும்" என்றாள் கற்பகம் அத்தை.

"பார்க்கணும். பையன் வீட்டுல ஒத்துக் கணுமே. ஏதாவது ஒரு வேலையில் பையன் இருந்தாப் பேசலாம்."

"இந்த வேலை கிடைக்குமா?"

"கிடைக்கிறது கஷ்டம். அது பெரிய கம் பெனி. இவனுக்கு அந்தளவு டாலண்ட் இருப்பதா எனக்குத் தெரியலை" என்றார்.

என்ன இவர் இப்படிப் பேசுகிறார்! உண்மையில் எனக்கு அருகதை இல்லையா? மனசு கஷ்டப்பட்டது. படுத்தேன்.

மறுநாள் இண்டர்வியூ... கிளம்பினேன். வழக்கமான கேள்விகள். வழக்கமான பதில்கள். அன்று மாலையே முடிவு அறிவிக்கப் பட்டுவிடும் என்றார்கள். இண்டர்வியூ இரண்டரை மணி நேரம் நடந்தது. நான்கு மணிக்கு அறிவிக்கப்படலாம். இன்னும் ஒரு மணி நேரம் இருக்கிறது.. எங்கு போகலாம்? ஒரே அவஸ்தையாய் இருந்தது. தனக்கு மட்டும்தான் இந்த அவஸ்தையா.. இல்லை இண்டர்வியூவில் கலந்து கொண்ட எல்லோருக்கும் இந்த அவஸ்தையா?

ஆனால் எனக்கு இந்த வேலை கிடைக்கும் என்ற நம்பிக்கை இருந்தது.

நான்கு மணிவாக்கில் "மிஸ்டர் கோபி" என்று நான் அழைக்கப்பட்டேன். காலையில் இண்டர்வியூ நடந்த அதே அறைக்குச் சென்றேன். "யூ ஆர் அப்பாயிண்டட்" என்று கை குலுக்கினார்கள். அப்பாயிண்மெண்ட் ஆர்டரைக் கையில் கொடுத்தார்கள். மனசு சந்தோஷப்பட்டது. "மண்டே நீங்க ஜாயின் பண்ணீங்க" என்றார்கள்.

வெளியே வந்தேன். மற்ற அனைவரும் கிளம்பிப் போய் இருந்தார்கள்.

வீட்டுக்கு வந்தேன். எல்லோரும் இருந்தார்கள். கையில் சாக்லேட் வாங்கிப் போனேன். எல்லோருக்கும் கொடுத்து என் சந்தோஷத்தைப் பகிர்ந்து கொண்டேன்.

"ஊருக்குக் கிளம்பணும்... இரண்டு நாளில் திரும்ப வரணும்" என்றேன்.

எல்லோரும் சந்தோஷப்பட்டார்கள். என் பையை எடுக்க மாடிக்குப் போகையில் கற்பகம் அத்தை தன் கணவரிடம்,

"ஏங்க.. இந்தப் பையனுக்குத்தான் நல்ல வேலை கிடைச்சிடுச்சே... நம்ம பொண்ணையே இந்தப் பையனுக்குப் பார்க்கலாமே!" என்றாள்.

"நானும் அதுதான் யோசிக்கிறேன்" என்றார் அவர்.

---

*''தற்கொலை செய்து கொள்ள ரயில் தண்டவாளத்தில் படுத்திருக்கீங்களே; பக்கத்துலே எதுக்குச் சின்ன மூட்டை?''*

*"ரயில் எங்கப்பா சரியான நேரத்துலே வருது! லேட்டாச்சுன்னா பசிக்கு அதில் ரெண்டு ரொட்டி வச்சிருக்கேன்!"*

- வை. வெங்கடேசன்







# கறுப்பு ரோஜா

அமானுஷ்ய - அதீத கற்பனைக் கதைகள் தமிழ்ப் படங்களுக்கு உதவாது என்பதற்குப் பல உதாரணங்கள் காட்டலாம். ஆனால், ஆபாவாணன் மறுபடி முயன்றிருக்கிறார்.

உன்னதமான ஓர் ஒளிப்பதிவாளர், திறமை வாய்ந்த எடிட்டர் இருந்தால் போதும்; மிச்சமெல்லாம் அநாவசியம் என்பது அவர் சித்தாந்தம் போலும்!

களையில்லாத ஹீரோ - ஹீரோயின், செவி விரோத இசை, லாஜிக்கே இல்லாத கதை, நாடக பாணி வசனங்கள் என்று நிரம்பவே இம்சை. திகிலுக்குக் குறைவில்லாத திரைக்கதை என்பது ஒன்றுதான் ஆறுதல்.

அம்மா சென்ட்டிமென்ட் என்கிற புராதன விஷயத்தை அடித்தளமாகப் போட்டு, அதற்கு மேல் மந்திரவாதம், வசியம், குட்டிச்சாத்தான் கிராமம், ஏவல் விவகாரங்களால் செட் போட்டிருக்கிறார்.

பைத்தியமாக இருக்கிற அம்மாவை குணப்படுத்த வேணுமென்றால், பெற்ற பிள்ளையை பலி கொடுக்க வேண்டுமாம்... கஷ்டம்!

அதற்காக, இல்லாத ஜாலங்களெல்லாம் செய்து ஒரு பெண்ணைக் காதல் பண்ணி, மனைவியாகக் கூட்டி வருகிறார் ஹீரோ!

அந்த அசட்டுப் பெண்ணுக்கு அவன் மேல் அசாத்திய காதல். 'நம்பாதே' என்று உண்மை விளம்புவதற்காக ஒரு வினிதா. (வினிதாவைப் போட்டு விட்டோமே என்பதற்காக மழையில் நனைய விட்டு படாதபாடுபடுத்தி விடுகிறார்கள்.)

இடைவேளைக்குப் பிறகு அடிக்குரலில் பேசிக் கொண்டு ராம்கி வருகிறார். என்னவோ பண்ணுவாராக்கும் என்று பார்த்தால் திரை முழுக்க குதிரை ரேஸ் காட்டிக் கடுப்படிக்கிறார்கள்!

சிலாக்கியமாக விளம்பரப்படுத்தப்பட்ட டி.டி.எஸ். சவுண்ட் சிஸ்டம் பற்றிச் சொல்ல வேண்டும். நூறு லவுட் ஸ்பீக்கர்கள் ஒன்றாக அலறுவது போல மகா இரைச்சல். போனால் போகிறதென்று படம் பார்க்க வருகிறவர்களைக் கூட ஓட ஓட விரட்டும் கொலை ஒலி.

பாடல்களெல்லாமே 'ஓ' என்ற இனிஷியலுடன் ஆரம்பிக்கின்றன. சமிக்ஞையாகக் கொண்டு எழுந்து வெளியே போக சௌகரியமாய் இருக்கிறது.

கற்பனைக் கதை என்றாலும் மூடநம்பிக்கைகளை வெகுவாக சிலாகிக்கிற படம் என்பதால் எந்த ஒரு குறிப்பிட்ட காட்சியையும் பாராட்டத் தோன்றவில்லை.

பலி, ஏவல்-பில்லி-சூனியம், குட்டிச்சாத்தான், வசியம் என்று அருவருப்புகள் படம் முழுக்க நிறைந்திருப்பதால் தியேட்டரை விட்டு வெளியே வந்ததும் டெட்டால் போட்டுக் குளிக்கத் தோன்றுகிறது!

**- தரமணி**

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : வி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.



# திரு.வி.க.நகர் பெனி.:பிட் :.பண்டு லிமிடெட்

ஸ்தாபிதம் 1989

தலைமை அலுவலகம் : 10, 2வது தெரு, ஆண்டாள் அவின்யு, (திரு.வி.க. நகர் பஸ் நிலையம் அருகில்), சென்னை - 600 082. போன் : 5378690

பாரீஸ் கிளை : 8/2, ஸ்ட்ரிங்கர்ஸ் தெரு, சென்னை - 600 108. போன் : 565760

தி. நகர் கிளை : 20, ரங்கநாதன் தெரு, சென்னை - 600 017. போன் : 4344324

அண்ணா நகர் கிளை : AC-38, 4வது தெரு, KHM ஆஸ்பத்திரி பின்புறம், அண்ணா நகர், சென்னை-40.



**பாதுகாப்பான முறையில் சேமித்து வளருங்கள்**

## திருமூர்த்தி பாண்டு

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 20,000 | 5 ஆண்டு | ரூ. 60,000 |

## வசந்தம் பாண்டு

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 7,000 | 40 மாதம் | ரூ. 14,000 |

## பென்ஷனர் வைப்பு நிதி

| முதலீடு | காலம் | வட்டி |
|---|---|---|
| ரூ. 10,000 | 1 ஆண்டு<br>2 ஆண்டு<br>3 ஆண்டு | 21% |

★ பென்ஷனர், ஓய்வு பெற்றோர், முதியோர் (50 வயதிற்கு மேல்), விதவைகள், ஊனமுற்றோர் இத்திட்டத்தின் கீழ் பயன்பெறலாம்.
★ பிரதி மாதம் 25ஆம் தேதி வட்டி வழங்கப்படும்.

## பென்ஷனர் மறுமுதலீட்டு திட்டம்

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 5,000 | 1 ஆண்டு<br>2 ஆண்டு<br>3 ஆண்டு<br>40 மாதம் | 6,157<br>7,582<br>9,337<br>10,000 |

## எக்செல் பாண்டு - A திட்டம்

| முதலீடு | காலம் | வட்டி |
|---|---|---|
| ரூ. 9,000 | 2 ஆண்டு | 21% |

பிரதி மாதம் 25ஆம் தேதி வட்டி வழங்கப்படும்

## எக்செல் பாண்டு - B திட்டம்

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 9,000 | 2 ஆண்டு | ரூ. 13,648 |

## வைப்பு நிதி

| முதலீடு | காலம் | வட்டி |
|---|---|---|
| ரூ. 5,000 | 1 ஆண்டு<br>2 ஆண்டு<br>3 ஆண்டு<br>4 ஆண்டு | 18%<br>19%<br>20%<br>21% |

பிரதி மாதம் 25ஆம் தேதி வட்டி வழங்கப்படும்

## மறுமுதலீட்டு திட்டம்

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 1,000 | 12 மாதம்<br>24 மாதம்<br>36 மாதம்<br>42 மாதம் | 1,195<br>1,455<br>1,810<br>2,000 |

★ சேமிப்பு திட்டம் 12% வட்டி நாள் கணக்கில் வட்டி கணக்கிடப்படும்.

★ தங்க நகைகள் பேரில் ஒரு சவரனுக்கு ரூ. 2400 வரை கடன் வழங்கப்படும். மாத வட்டி 2%.

★ சென்னை மாநகர வீடு/ஃப்ளாட் பேரில் கடன் வழங்கப்படும். குறைந்த வட்டி. கடன் மிக விரைவாக வழங்கப்படும்.

★ பங்குதாரர்களுக்கு மட்டும்

★ ரூ.10 செலுத்தி பங்குதாரர் ஆவீர்.

## வேலை நேரம்

தலைமை அலுவலகம் : 9 முதல் 5. ஞாயிறு 9 முதல் 1

கிளைகள் : 10 முதல் 5. ஞாயிறு 10 முதல் 1

உணவு இடைவேளை இல்லை. செவ்வாய் விடுமுறை.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka








# SANDALWOOD

## இயற்கையின் பரிசு இணையற்ற சந்தனம்.

சந்தனம் சருமத்தின் எண்ணெய் பசையை நீக்குவதோடு,
வலுவிழந்த மேனியை மீண்டும் பொலிவு பெற உதவுகிறது.

**கோகுல்® சாண்டால்®**

தயாரித்து அளிப்பவர்கள்

86 வருடங்களாக தொடர்ந்து உங்களின் அபிமானத்தை பெற்று வரும்

**T.S.R. & Co.,** Mfrs. GOKUL COSMETICS